# முகவுரை



பஞ்ச தந்திரம் என்பது இனிய கதைகள் மூலமாக நீதிகளைப் போதிக்கும் ஓர் அரிய நூல். அநேக வருஷங்களுக்கு முன்னே பாடலிபுரம் என்னும் நகரத்தில் அரசாட்சி புரிந்து வந்த சுதரிசனன் என்னும் அரசன் தனது பிள்ளைகள் கல்வி வாசனை யில்லாத மூடர்களா யிருப்பதை நினைத்து ஒருநாள் தனது இராஜ சபையில் மன வருத்தப்பட, அச் சபையில் இருந்த சோமசன்மா என்னும் நீதி சாஸ்திர பண்டிதர் ஒருவர் எழுந்திருந்து இராஜரைப் பார்த்து, "அரசரே! நீர் வருத்தப்பட வேண்டாம்; உலகத்தில் உமது பிள்ளைகளுக்குச் சமானமானவர்கள் ஒருவரும் இல்லை யென்று சொல்லும்படி, அவர்களை அவ்வளவு சாமர்த்திய முள்ளவர்களாக ஆறுமாத காலத்தில் நான் செய்துவிடுவேன்!" என்று கூற, இதைக் கேட்ட அரசன் வெகு சந்தோஷித்து அவ்வாறே அப் பண்டித ரிடத்தில் தனது பிள்ளைகளை ஒப்புவிக்க, சோமசன்மா என்னும் அப் பண்டிதர் அரசன் பிள்ளைகளைத் தமது வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய், இப் பஞ்சதந்திரக் கதைகளை அவர்களுக்கு நாளடைவில் சொல்லி வந்து, அப் பிள்ளைகளை வெகு புத்திசாலிக ளாக்கிவிட்டதாகச் சொல்லப்படுகிறது. இதனால், கல்வி பயிலும் சிறுவர்களுக்கு இப் பஞ்சதந்திரம் வெகு அத்தியாவசியகமான நூல் என்பது சொல்லாமலே விளங்கும்.

இப் பஞ்ச தந்திரத்துக்கு முதனூல் ஸம்ஸ்கிருத பாஷையில் உள்ளது. இச் ஸம்ஸ்கிருத பஞ்சதந்திரம் குமார

1300 வருஷங்களுக்கு முன் இயற்றப்பட்டதாக மதிக்கப்படுகின்றது. விஷ்ணுசர்மா என்பவர் வடமொழியில் இயற்றியுள்ள ஹிதோபதேசம் என்னும் நூலானது பெரும்பாலும் பஞ்சதந்திரக் கதைகளையே தழுவியிருப்பதால், அதனை மேற்படி ஸம்ஸ்கிருத பஞ்சதந்திரத்தின் சங்கிரகம் என்று சொல்லலாம். இப் பஞ்சதந்திர நூலானது அறிவை விருத்தி செய்யக்கூடிய அநேக நீதிக் கதைகளால் தொகுக்கப்பட்டிருப்பதால், இது இங்கிலீஷ், பாரஸீகம், மராத்தி, அரபு முதலிய உலகத்தில் வழங்கும் பல பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

தமிழில் வசன ரூபமாயுள்ள பஞ்சதந்திரக் கதையை வித்வான் தாண்டவராய முதலியார் என்பவர் 1826-ம் வருஷத்தில் மராத்தி பாஷையிலிருந்து மொழி பெயர்த்து அச்சிட்டார். முதலியார் இதனை அச்சிட்டு வெளிப்படுத்துவதற்குமுன், மிக்க பிழையுள்ள பஞ்சதந்திர வசனம் ஒன்று தமிழில் வழங்கி வந்தது.

நிற்க, செய்யுள் ரூபமாயுள்ள இப் பஞ்சதந்திர பாடற் கதையானது எளிய நடையில் இனிய விருத்தப் பாக்களால் இயற்றப்பட்டிருப்பதால், இது கல்வி கற்கும் சிறுவர்களும் சிறுமியர்களும் சுலபமாக மனப்பாடம் செய்வதற்கு ஏற்ற நூலாகும். பஞ்சதந்திரச் செய்யுளை இயற்றியவர் வீரமார்த்தாண்ட தேவர் என்பவர்; இது பின் வரும் வெண்பாவால் விளங்கும்:—

"வயவீர ரொன்பான் வழியுற்ற மேலோன்
ஜயவீர மார்த்தாண்ட தேவன்—வியமாய்
பன்னூலின் நுண்ணூலாம் பஞ்சதந் திரத்தை
மன்னூலாச் சொற்றான் மகிழ்ந்து."

# முகவுரை

வீரமார்த்தாண்ட தேவரின் காலம் இன்னதென்று விளங்கவில்லை; ஆயினும், இவர் வசன பஞ்சதந்திர மொழி பெயர்த்த தாண்டவராய முதலியாருக்கு முற்பட்டவர் என யூகிக்கப்படுகின்றது. வசன பஞ்சதந்திரமும், செய்யுள் பஞ்சதந்திரமும் பெரும்பான்மையும் ஒத்திருந்த போதிலும், சிற்சில இடங்களில் கதா சந்தர்ப்பம் வித்தியாசப்படுகிறது. வசனத்தில் இருப்பன சில பாடலில் இல்லை; பாடலில் இருப்பன சில வசனத்தில் இல்லை.

அன்றியும், பல பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள இப் பஞ்சதந்திர நூலின் ஒரு பாஷையிலுள்ள பிரதி மற்றொரு பாஷையிலுள்ள பிரதியோடு ஒவ்வுதல் இல்லாமல், கதைகளில் வித்தியாசம் காணப்படுகின்றது. சுதரிசனன் என்னும் அரசன் அரசாட்சி செய்த நகரம் சில பிரதிகளில் பாடலிபுரம் என்றும், சில பிரதிகளில் மகிழாருப்பியம் என்றும் காணப்படுகின்றது. பாடலிபுரம் என்பது கங்காநதி தீரத்தில் உள்ள ஓர் நகரம்; மகிழாருப்பியம் என்பது தென்னிந்தியாவிலுள்ள (St. Thome, Mylapore) திருமயிலை நகரமாயிருக்கலாம் என்று ஓர் ஆங்கில பண்டிதர் (Professor Wilson) யூகிக்கிறார். கன்னட பாஷையிலுள்ள பஞ்சதந்திரமும், வடமொழி ஹிதோபதேசமும் பாடலிபுரத்தையே அரசன் இருப்பிடமாகக் கூறுகின்றன.

பஞ்சதந்திரம் என்பது இந்தியாவில் சில இடங்களில் பஞ்சோபாக்கியானம் என்னும் பெயராலும் வழங்குகின்றது; பஞ்ச உபாக்கியானம் என்றால் ஐந்து கதை என்று பொருள். பஞ்சதந்திரத்தைப் பற்றிய மற்ற விவரங்கள் பஞ்சதந்திர வசன நூலின் முகவுரையில் காணப்படும்.

பஞ்சதந்திரச் செய்யுளின்

# விஷய அட்டவணை

## விஷய அட்டவணை

In order to apply the Juche idea to the revolution and construction it is essential to observe thoroughly the guiding principles of the Juche idea.

பஞ்சதந்திரச் செய்யுளின்

விஷய அட்டவணை முற்றுப்பெற்றது.

# பஞ்சதந்திர வசனம்

விலை அணா 10

பஞ்ச தந்திரம் என்பதற்கு ஐந்து உபாயம் (அதாவது: பகைவரை ஜயிப்பதற்கு உபயோகிக்க வேண்டிய ஐந்து வகை உபாயங்கள்) என்பது பொருள். அவையாவன: 1. மித்திர பேதம் (சிநேகத்தைக் கெடுத்துப் பகையை உண்டாக்கல்). 2. சுகிர்ல்லாபம் (தமக்குச் சமானமானவர்களோடு கூடிப் பகை யில்லாமல் வாழ்ந்திருத்தல்). 3. சந்தி விக்கிரகம் (பகைவரை அடுத்து உறவு செய்து வெல்லுதல்). 4. லப்தஹானி (தன் கையிற் கிடைத்த பொருளை இழத்தல்). 5. அசம்பிரேக்ஷிய காரித்துவம் (காரியத்தைத் தேற விசாரியாமற் செய்தல்).

விஷ்ணுசர்மா என்பவரால் வடமொழியில் இயற்றப் பட்டு, நாகநாத பண்டிதரால் தென்மொழியில் கத்திய ரூபமாக மொழிபெயர்க்கப்பட்டுள்ள "ஹிதோபதேசம்" என்னும் நூலில் சொல்லப்பட்ட கதைகள் பெரும்பான்மையும் இப் பஞ்சதந்திரக் கதைகளையே தழுவி யிருக்கின்றன.

இப் பஞ்ச தந்திரம் என்பது தமிழில் கத்திய நடை பயில்வாருக்கு வழிகாட்டியாக, வித்வான் தாண்டவராய முதலியார் என்னும் புலவர் சிகாமணியால் வெகு திறத்துடன் இயற்றப்பட்ட வசன நூலாகும்.

இந்நூல் வசன நடையில் எழுதப்பட்டிருந்த போதிலும், இதில் எளிதில் பொருள் விளங்காத திரிசொற்கள் பல ஆங்காங்கு விரவி யிருப்பதால், எல்லோருக்கும் எளிதில் பொருள் விளங்கும்படி இந் நூலில் வரும் கடின பதங்களை யெல்லாம் விளக்கி விரிவான அரும்பதக் குறிப்புரை ஒன்று நூதனமாக எழுதி இந்நூலின் முடிவில் சேர்க்கப் பட்டுள்ளது.

உ

கடவுள் துணை

# பஞ்சதந்திரம் செய்யுள்

## [Panchatantram in Verse]

### கதை வரலாறு

பாடலி புரத்து மன்னன் சுதரிச னன்றன் பாலர்
மூடராய்த் திரித லாலே யவர்கண்மேன் மோக நீங்கி
வாடியிங் கிவர்க ளாலே பலனென்ன மலட்டா வொப்பாம்
பீடிலார் பிறந்தா ரன்றே பிள்ளையெண் ணிக்கைக் கென்றான். ( )

கல்வியுங் குலத்தைக் காக்குங் கருத்துமில் லாத மைந்தர்
செல்வமுங் குணமு மிக்க செவ்விசே ருருவும் பெற்றென்
நல்வினை யிலாரைப் பெற்ற நங்கைதான் பூத்த காலை
யில்வரு கருவி லாமற் கருவழிந் திடலு நன்றே. (2)

ஆயிர மகவைப் பெற்று மாவதென் னம்மா மிக்க
தூயநல் லறிவ னான சுதனொரு வனையே பெற்றால்
தாயொடு தந்தை யென்ன தவமியற் றினரோ வென்று
மாயிரு ஞாலம் போற்று மாபெலாந் தழைக்கு மன்றே. (3)

எவ்வனஞ் செல்வ மிக்க விராசத மவிவே கத்துள்
ஒவ்வொன்றே கேட்டுக் கெல்லா முறுதுணை யாகி நிற்கும்
இவ்வகை நான்குங் கூடி யொருவன்பா லிருந்த வென்றால்
எவ்வகை யாலன் னோனுக் கிகபரங் கிடைப்ப தென்றான். (4)

அங்கவன் சபையின் மிக்க அறிஞரை நோக்கி மைந்தர்
தங்களை மடமை நீங்குந் தகைமைய ரிலரோ வென்னத்
துங்கமா மறையோ னான சோமசன் மாவெ ழுந்தே
இங்கிவர்க் கறிவா லொப்பா ரிலரெனச் செய்வே னென்றான். (5)

விஞ்சுமா மறையோன் மாற்றம் வினவியே யரசர் கோமான்
நெஞ்சக மகிழ்ந்து மிக்க நிதியொடு மக்க டம்மைக்
கொஞ்சமில் களிப்பி னோடுங் கொடுத்தனன் சோம சன்மா
பஞ்சதந் திரத்தி னாலே பாலரைத் திருத்த வெண்ணி. (6)

மன்னவன் குமாரர் தங்கண் மனங்களுக் கேற்கு மாறு
நன்னயம் பெறுசொற் பேசி நண்புகொண் டிருக்கு நாளில்
பொன்னணி மார்பீ ரின்பம் பொழிகதை யொன்றுண் டென்னப்
பன்னுமிக் கதையே தென்றார் பஞ்சதந் திரமென் றானே. (7)

பஞ்சதந் திரங்க ளென்னும் பான்மையே துரைத்தி யென்ன
வஞ்சமா மித்ர பேத மருவிய சுகிர்லா பஞ்சேர்
விஞ்சுமா நிலத்திற் சந்தி விக்ரக மர்த்த நாசம்
அஞ்சலி லசம்பி ரேக்ஷ்ய காரித்வ மாம வற்றுள். (8)

மித்திர பேத நட்பை விலக்கியே பகையுண் டாக்கல்
ஒத்தவர் நட்புக் கூட்ட லோதிய சுகிர்லா பந்தான்
மெத்தவும் பகைத்து ளாரை விரும்பிநட் பாக்கிப் பின்னர்
சத்துரு நாசம் பண்ணல் சந்திவிக் கிரக மாமே. (9)

கிடைத்ததை யழியப் பண்ணல் கெழுமிய வர்த்த நாசம்
திடப்பட விசாரி யாமற் செய்யுங்கா ரியத்தி னாம்
கடைப்படு மசம்பி ரேக்ஷ்ய காரித்வ மென்ப தாகும்
தடப்பெருந் தோளீ ரென்றான் சதுமறைக் குரிய கோமான். (10)

மாதவ னுரைக்குஞ் சூழ்ச்சி மன்னவன் குமாரர் நெஞ்சில்
காதலை விளைத்த லாலே கமலமார் பின்னை நோக்கி
நீதியா மறிய வேண்டு மெமக்கிதை விரித்து நன்றா
ஓதுக பெரியோ யென்ன வுயர்மறை யவன்சொல் வானால். (11)

கதை வரலாறு முற்றிற்று.

## முதலாவது தந்திரம்

# மித்திரபேதம்

(சிநேகத்தைக் கெடுத்துப் பகையை உண்டாக்கல்)

**[Sowing discord among friends]**

---

### சிங்கத்தோடு இடபம் வாழ்ந்து இறந்த கதை

*சிங்கமொன் றிடப மொன்று சேர்ந்துவாழ்ந் திருந்த நட்பை*
*அங்கொரு நரிதா னெய்தி யழித்ததா லென்று கூற*
*இங்கிது புதுமை தானே யிடபமே தரிமா வேது*
*எங்குறு நரிய ழித்த விவரமே தருள்க வென்றார்.* (1)

*நலந்திகழ் தெற்கு நாட்டின் மகிழாருப் யத்தி னண்ணி*
*இலங்கிய வர்த்த மான னெனுமொரு வணிகன் றன்பால்*
*துலங்கிய நிதிமிக் குற்றுந் தூரவா ணிபஞ்செய் திந்தத்*
*தலம்வரல் வேண்டு மென்று தன்மனத் தெண்ண லுற்றான்.* (2)

*பொருளிலார்க் கின்ப மில்லை புண்ணிய மில்லை யென்றும்*
*மருவுறு கீர்த்தி யில்லை மாந்தருட் பெருமை யில்லை*
*கருதிய கரும மில்லை கதிபெறு வழியு மில்லை*
*பெறுநிலத் திடைந டக்கும் பிணமெனப் படுவ ரன்றே.* (3)

*நற்பொரு ளறத்தை யின்ப நலத்தைஞா னத்தை மிக்க*
*சொற்பெறு புகழை யென்றுந் துகளறு பெருமை தன்னைப்*
*பற்பல ருறவை நட்பைப் பகைதவிர்த் திடுந்தி றத்தைப்*
*பொற்புறு கதியை யெல்லாம் பொருளலாற் றருவ தின்றே.* (4)

*ஆதலாற் றரும வாற்றா லரும்பொரு ளீட்டி மேலும்*
*ஊதியங் கொண்ட றஞ்செய் துரியவப் பொருளைக் காத்தல்*
*நீதியிவ் வாறு செய்யார் நிதியமுந் தேய்ந்து மற்றும்*
*ஓதுமெந் நலமு மின்றி யுறுதுய ரடைகு வாரே.* (5)

இன்னன பலவு நெஞ்சி லெண்ணியே வணிகன் றன்பால்
மன்னிய சரக்கைச் சூல வண்டியி லேற்றிக் கொண்டே
தென்னமர் நந்த கன்சஞ் சீவக னெனும்பே ருற்ற
தன்னெரு திரண்டும் பூட்டிச் சதுரொடு நடத்தி னானே. (6)

நடத்திடு நாளி லோர்நா ணனிபெருங் காட்டி லோர்காட்
டிடத்திற்சஞ் சீவ கன்கா லிடறியே நொண்டி யாக
எடுப்பருஞ் சரக்கை யாள லெடுப்பித்தவ் வெருதைக் காட்டில்
விடுத்தொராள்வைத்துப்போனான்விளிந்ததென் றவனும்போனான்.

போனபின் னெருதுக் கின்னம் பொன்றுநாள் வராமை யாலுந்
தீனிமிக் கருந்த லாலுந் திணிந்துமுன் னொடிந்த காலில்
ஊனமு மாறி வேறோ ரொப்பிலா விடப மாகிக்
கானக முழுது மேய்ந்து களிப்புடன் றிரியு நாளில். (8)

வேறு

பொங்குகதிர் திங்களொளி புகுதவரி தாகிக்
கங்குல்குடி தங்கிவளர் கானமதை யாளும்
பிங்கல னெனப்படுமொர் பேருடைய தாகுஞ்
சிங்கவர சன்யமுனை சேர்கரை யடைந்தே. (9)

கோதறு நதிப்புனல் குடித்திட நடக்கும்
போதிடய மப்புறமொர் பொற்புறு மிடத்தில்
காதுமுக வீற்றெழு கடற்பெரு முழக்கே
ஈதென நடுக்குற விடிக்குரல் செய்தன்றே. (10)

இங்கிதை யறிந்தில மிதேது புதிதென்று
சிங்கவர சங்கமொடு சிந்தையு நடுங்க
அங்கிரு நரிக்குருளை கண்டவவை தம்பேர்
வெங்கரட கன்றமன கன்னென விளங்கும். (11)

அந்தவா சன்முத லமைச்சுநரி சேய்கள்
வந்தவவை யாதலின் மடங்கலெனு மன்னன்
சிந்தைதளர் வுற்றதென செய்தியென வேயுன்
னுந்தமன கன்கரட கன்றனை யுசாவ. (12)

கரடகன மக்கிதென காரியமி தாலே
இரைபெறுது மோபெருமை யெய்துவது முண்டோ
கருமமல தானவொரு காரிய மியற்றின்
பெருமுளைபி டுங்கியகு ரங்குபெறு பேறே. (13)

## குரங்கு குறி நசுங்கிய கதை

பெரியமுளை யேதுகுரங் கேதுபெறு பேறே
துரையெனவொர் தொன்னகர முண்டதை யடுக்க
மருவுமொரு கோயிலதன் மன்னிய பணிக்கோர்
பரியமர மிருபிளவு படமுளை கடாவ. (14)

பாதிபிள வாகியொரு பாதிபிள வாமல்
ஏதமறு சோலையி னிடத்தது கிடப்ப
மாதுளவ னத்திலுறை மந்திசில வந்தே
தாதவிழ் மலர்ப்பொழிலி ருவிவிளை யாட. (15)

அங்கொரு குரங்குபிள வாமரவி டர்க்குள்
தங்குகுறி வைத்துமுளை தனைவறித சைத்தே
செங்கைகொ டெடுப்பவிடர் சிக்கென நெருக்க
அங்குறி நசுங்கியுயிர் மாய்ந்ததது வன்றே. (16)

காரிய மலாதவொரு காரிய மியற்றின்
பேருயி ரிழப்பதவர் பேறெண வுரைத்தே
தேருமிரை நென்னல்சில தின்றகுறை யைத்தின்
றூர்வது நமக்குறுதி வாவென வழைக்க. (17)

கரடகனை நோக்கியிரை கருதுவகை நமக்கேன்
அரசர்கரு மம்பெருமை யாவையு மளிக்கும்
திரமுடைய வரசர்பணி செய்துலகி லதனல்
பெரியரவர் நண்புகொடு பெறுகுவர் சகாயம். (18)

மீக்கவவர் சீவனமெ வர்க்குமிகு முதவி
திக்குலவு கீர்த்திபெறு சீவனம தல்லால்
கொக்குமுத லானபற வைக்குல மனைத்துந்
தக்கவிரை கொள்ளுமது தான்பெருமை யன்றே. (19)

வன்பசிகொள் சிங்கமத யானையல தியாதுந்
தன்பசித னக்குறுக ராதுதளர் நாய்கள்
என்புசிறி தீரமில வேனுமிரை யாக
அன்பினொடு கௌவியெயி றழியினும் விடாவே. (20)

ஆனைபசி கொள்ளினு மதற்குரிய பாகன்
தான்வலிய வேயிரை தரத்தர வருந்தும்
ஈனமொடு நாயுதர மெக்கிமுக நோக்கி
வானுனிகு ழைத்துதவ வாங்கியுணு மெச்சில். (21)

இந்தவகை தமனக னியம்புதலு நாமோ
மந்திரிகள் கூடிறன மறுப்பவொரு கருமம்
தந்திரமொ டேபுரித லாற்றலைமை யெய்துஞ்
சிந்தையினி லூகமிலை யேற்சிறுமை சேரும். (22)

நல்வினைதெ ரிந்துயர்ந லம்பெறுத லரிதே
அல்வினைபு ரிந்திழிவ டைந்திடுத லெளிதே
செல்வமுத வேரிகரை செய்தன்மிக வரிதே
இல்கியிட வேயதையு டைத்தன்மிக வெளிதே. (23)

*ஏறிவரை மேலொருக லேற்றன்மிக வரிதே*
*சாறிவிழ வேயொருக றள்ளிவிட லெளிதே*
*தேறியிது பெருமையிது சிறுமையென வெண்ணிக்*
*கூறுபெரி யோரிவைகு றித்திடுவ ரன்றே.* (24)

*ஒருகணம தானபொழு தேனுமுர வோர்கள்*
*பெருமைபுகழ் ஞானமுள பேரொடுமி ருப்பர்*
*கருமையுரு வானகொடி கட்டமுட னெச்சில்*
*பருகிவெகு நாளளவு பாரிடை யிருக்கும்.* (25)

*பெருமையொடு சிறுமைதரு பெற்றியவ ரவரால்*
*வருவதல தியாதுமிலை மன்னுமிவை தம்மில்*
*அருமையுணர் வோர்பெறுவ ராசில்வரு பெருமை*
*கரடகவெ னத்தமன கனைவினவு மதுவே.* (26)

*இன்னவகை நீதிக ளியம்புதம னகநீ*
*உன்னுவகை யென்செய வுரைத்திடுதி யென்ன*
*மன்னவன் வருந்தினதை யென்னென மதித்தே*
*அன்னவன் மனத்துய ரகற்றிடுவ னென்ன.* (27)

*அந்தமொழி கேட்டகர டகனரச னுள்ளச்*
*சிந்தைமெலி வெப்படிதெ ரிந்ததுனக் கென்ன*
*புந்தியில்வி சாரமொடு போயின னதைத்தான்*
*முந்துமா சன்றிருமு கஞ்சொலிய தென்றான்.* (28)

## வேறு

*சிங்க மன்னனை யடைந்தவன் செய்தியை வினவி*
*அங்க வன்றன தகத்துய ரகற்றியே யவன்பால்*
*துங்க மந்திரத் தலைமைபூண் டிவ்வனஞ் சூழு*
*ங்கு லங்களுக் கினியவாழ் வளிப்பனு னென்றான்.* (29)

வேந்த ருங்கொடுந் தீயும்வெவ் விடம்பொழி பகுவாய்ப்
பாந்த ளுஞ்சரி யாதலி னன்னவன் பக்கல்
போந்து நண்புகொண் டடவிநீ புரக்குமா றென்னும்
மோந்தி டும்படி கடிப்பது மன்னர்தம் முறையே. (30)

மன்ன வன்குணங் கொடியெதன வகுத்தனு மதற்குத்
துன்னு பைங்கொடி யடுத்தகொம் பதனையே சூழுங்
கன்னி மாதரு மன்னருந் தங்களைக் காத்தே
பன்னு மிங்கிதஞ் சொலுமவர் பாற்செய்வர் பரிவு. (31)

என்ன வெப்படி பேசுவா யிறையிடத் தெனக்குப்
பன்னு கென்னவென் வாய்நின்று மழைபொழி பாரில்
துன்னும் வித்திடை முளையென வுத்தரந் தோன்றும்
மன்ன வன்வின வினுக்கெதி ரெனைநன்கு மதிக்க. (32)

என்ற லுங்கர டகன்றம னகனுரைக் கிசைந்து
நன்று நீயவன் பக்கல்போ யவன்குண நாடி
வென்றி யெய்தென நரியரி வேந்தனைச் சேர்ந்து
நின்று கைதொழ நோக்கியே சிங்கமா நிருபன். (33)

இற்றை நாள்வரைக் காண்கிலன் றமனகா வென்ன
உற்ற காரியங் கண்டபோ தெய்துவ னுன்பால்
கொற்ற வாவெனைச் சிறியனென் றுன்மனங் கொள்ளேன்
வெற்றி யும்பெரு மையுமுனக் கெய்திட விளைப்பன். (34)

அங்கு ரத்தினி லறிகுவர் விளைபயி ரதுபோல்
இங்கு நீயறி குவையினி யென்குணஞ் செயலால்
துங்க வாளிசை யாழ்புவி தோகையர் சான்றோர்
தங்கு நூல்கள்தாப் பாற்றுவோர் தங்களாற் றழைக்கும். (35)

நலங்கொண் மன்னவ ரடைந்தவர் தங்களு ளுடிப்
புலன்கொள் பேரறி வாளரை நம்பியே பொருந்தில்
இலங்கு நீதிக ளியற்றுவ ரவரா செங்குந்
துலங்கு மென்னலு மனமகிழ்ந் தரசனுஞ் சொல்வான் (36)

உரிமை மந்திரிக் குமரனீ யாதலி னுனக்குப்
பெருமை மந்திரப் புத்திகள் வந்திடப் பெற்றாய்
வருக வென்றருகு கழைத்துநம் பிக்கையும் வழங்கி
ஒருமை யாகநங் காரிய மியற்றெனை வுரைக்க. (37)

அந்த மன்னனை நோக்கிநின் னகத்தொரு துளக்கம்
வந்த போதுநீ யுரையென மன்னனிவ் வனத்தில்
எந்த நாளுநா னறிகிலா முழக்கமின் றெழுந்த
திந்த மாமுழக் கென்னெனத் துளங்கிய திதயம். (38)

முழக்கிற் கேற்பதா யிருக்குமன் றேமுழங் குயிரும்
வழுக்கி வீழ்கையி லூன்றுகோ லென்னநீ வந்தாய்
இழுக்க மாறநீ யெனக்கதை யுணர்த்தென வியம்பத்
தழைக்கு மன்பொடு தமனக னொருகதை சாற்றும். (39)

## பேரொலி கேட்டு அஞ்சிப் பேரிகை கண்ட கதை

நரியொன் றெய்திய பசியினு லிரைதனை நாடித்
திரியும் போதச தியிலொரு பேரொலி செவிகேட்
டரிய நெஞ்சகந் துணுக்கென வச்சமுற் றேய்ந்து
தெரிவ மீதெனச் சென்றது திடங்கொடு பின்னர். (40)

அன்ன வோரிதான் சிறிதுது ரத்தமர்க் களம்போய்ப்
பின்ன ரோர்மரத் தடியுறு பேரியை நோக்கி
முன்னர் மேவுமத் தோலேயுங் கோலேயு முறையால்
உன்னி யேதன துளத்தினி லுணர்ந்ததிவ் வாறு. (41)

தூங்கு மிம்மரச் சினையினிற் றாழ்ந்தகோ டொன்று
பொங்கு காற்றினாற் றாக்கலாற் பொம்மெனு மொலிதான்
இங்கு மேவுமிப் பேரியி லெழுந்துள தென்று
சிங்க மன்னநீ யஞ்சுகை தகாதெனச் செப்பி. (42)

சென்று நானதை விரைவினிற் றெரிந்திவண் மீள்வே
னென்ற தன்விடை கொண்டுசஞ் சீவக வெருதை
நன்று கண்டுநண் புற்றுமீண் டரசனை நண்ணி
ஒன்று பேரொலிக் கேற்றதவ் வுயிரென வுணர்த்தி. (43)

நினது நட்பினை விரும்பிய ததுவென நிருபன்
அனைய தேலதை யழைத்துவா வென்னலு மதுபோய்த்
தனைநி கர்த்திடு மெருதினைத் தலைவன்முன் விடுத்தே
இனிய நண்பொடு மிருந்திட விருத்திய தன்றே. (44)

சிங்க மன்னனு மிடபமு முயிரெனச் சிறந்தே
அங்கி ருந்தர சாளுநாள் பழையதன் னமைச்சர்
தங்க ணண்பெலா மறந்துசஞ் சீவகன் றனையே
பொங்கு மந்திரி யெனக்கொளப் போயது நெடுநாள். (45)

பரிச னங்களு மந்திரிக் கூட்டமும் பார்த்தே
அரச னுந்தனை யடைந்தநம் மிடத்திலன் பற்றான்
இரை யருந்துவ தேதுநா மினியென விளங்கக்
கரட கன்றனை நோக்கியே தமனகன் கழறும். (46)

காட்டி லேதனித் திருந்தசிங் கத்துடன் கலந்த
மாட்டை வங்கண மாகநாங் கூட்டிய மாண்பு
கோட்டு வெங்களிற் றானைதன் மத்தகங் கொத்தத்
தோட்டி பாகனுக் கீந்தவா றாமெனச் சொல்லி. (47)

## தமக்குத் தாமே கேடு செய்துகொண்ட கதை

மூன்பு தங்களாற் றுங்களே கெட்டனர் மூவ
ரென்ப தோர்கதை யுண்டெனத் தமனக னியம்ப
அன்பொ டக்கதை யாதெனக் கரடகன் வினவச்
சம்பு வோடுசந் யாசிதூ தியதெனச் சாற்றும். (48)

சன்னி யாசியோர் தேவசன் மாவவன் றுனே
முன்னி யாசகத் தனேகநா டேடிய முதலைத்
துன்னு கந்தையுட் பொதிந்துதோன் றுதுவைத் திருந்தான்
அன்ன செய்தியா ஷாடபூ தியுமுளத் தறிந்து. (49)

சுந்த தந்திரு டாமனுஞ் சன்னியா சியின்மேற்
கந்தை யொன்றினை யெவ்வகை யாகிலுங் கவர்ந்தால்
நந்தம் வேசியக் கனேகநா ணடக்குமென் றெண்ணிப்
புந்தி கூர்ந்தொரு பிரமசா ரியினவண் பொருந்தி. (50)

அன்ன வன்றனை யடிபணிந் தடியனேன் றனக்கு
மன்னு நற்கதி பெறுவழி யருளென வழுத்திப்
பன்னு மிங்கிதத் தொடுபணி விடைபல வியற்றித்
துன்னு நாளிளோ ரந்தண னமுதிடத் துய்த்தே. (51)

இருவ ரும்மொரு பெருவழி நடந்தன ரிவன்றன்
ஒருது ரும்புதன் றலைமிசைக் கொண்டுண வளித்தோற்
குரிய நன்மனைத் துரும்பிதோ வொட்டிவந் ததுபார்
குரவ வாங்கிதைச் செலுத்துவ னென்றுகொண் டோடி. (52)

அந்த வீட்டிலுய்த் தவனென மறைந்திருந் ததன்பின்
வந்த சீடனை நம்பியே தேவசன் மாதன்
கந்தை யன்னவன் கைக்கொடுத் தொருகுளக் கரையில்
மூந்து நீர்ச்செள சாதிகண் முடித்துமீள் காலை. (53)

போருக டாவிரண் டங்கெதிர்ப் பாய்ந்திடப் பொழியும்
குருதி பாரினில் வீழ்ந்தது பருகிடக் குறுகி
நரியத் தாக்கிடைப் பட்டுயி ரிழந்தது நாடிப்
பரிவி னோடவன் பார்த்துநின் றேகின னதற்குள். (54)

இந்த வேளைபோ லெய்தரி தென்னவச் சீடன்
கந்தை தான்கொடு நடந்தொரு காட்டினிற் கரந்தான்
சிந்தை நைந்துசந் யாசியுந் தேடியோர் நகரில்
தந்து வாயன்வீட் டிடையிராத் தன்னில்வந் தடைந்தான். (55)

வேறு

தேடிய பொருளி ழந்த தேவசன் மாதன் னெஞ்சம்
வாடியங் கிருப்பத் தந்து வாயன்றன் மனைவி யோடே
கூடிய சோர னா கொழுநன்றான் வந்தா னென்றே
நாடிய தூதி யான நாவிதன் றேவி சொன்னாள். (56)

கேட்டலுந் தந்து வாய்ச்சி கெழுமுதன் கொழுநன் றங்கள்
வீட்டிலில் லாதி ருக்கும் வேளைபார்த் தவள்பின் சென்று
கோட்டிசேர் தந்து வாயன் குறுகிடக் கண்டு நெஞ்சில்
வாட்டமாய்த் திரும்பி வீட்டில் வந்தன ளவனுங் கண்டான். (57)

கண்டவன் கண்கள் சேப்பக் கடுஞ்சினங் கொடுசெந் தீயை
உண்டவன் போலச் சீறி யுதாசீனம் பலவும் வாயால்
விண்டவ டன்னைத் தூணில் வெருவுறக் கட்டித் தூக்கங்
கொண்டனன் றூதி தானுங் குறுகிநின் றிதனைக் கண்டாள். (58)

என்னைநீ கட்டி வைத்தே யேகியங் கவனைக் கூடிப்
பின்னைவா வென்ற தூதி பேசினள் கட்டி வைத்து
மின்னனா டந்து வாய்ச்சி விளக்கினை நிறுத்திப் போட்டே
அன்னவ னருகிற் சென்றே யணைந்துபோ கித்தி ருந்தாள். (59)

விழித்தனன் றந்து வாயன் வேண்டிய வாறு வைதே
பழித்தன னதற்குச் சற்றும் பகர்ந்திடா திருத்த லாலே
கழித்தன் னுறையைச் சூரிக் கத்தியைக் கொண்டு கற்பை
அழித்தவண் மூக்கைப்பற்றி யரிந்துபோட் டுறங்கும் போதில். (60)

தந்துவா யன்ம டந்தை தான்சுகங் கண்டு மெள்ள
வந்தன ளேதிக் குற்ற வண்ணங்கண் டவளை விட்டு
முந்தவன் கட்டி வைத்த முறைமைதப் பாள்போ னின்றாள்
அந்தவே ளையில்வி ழித்தா னவளையே பழிக்க லுற்றாள். (61)

ஐயையோ பாத காநீ யரிந்தமூக் கும்வ ளர்ந்து
துய்யவ ளானே னென்றன் றுகளறு கற்பி னாலே
வெய்யவுன் றன்னைப் போல வேறொரு வரையான் றீண்டில்
வையகம் பழிக்கு மெங்கண் மரபுக்கு மீன மாமே. (62)

என்னலு மவன்ப யந்தே யெழுந்திருந் தவளை நோக்கித்
தன்னைத்தான் பழித்துக் கொண்டு தாளிணை தன்னில் வீழ்ந்தே
அன்னவள் கட்ட விழ்த்திட் டாரவே மோந்து புல்கி [டான்.
மின்னிழை பொறுப்பா நீயென் பிழையென வேண்டிக் கொண்

அரிந்துமுன் விழுந்த மூக்கை யவள்கையி லெடுத்துக் கொண்டே
விரைந்துபோய்க் கணவன் றூங்கும்வீட்டினிற்படுத்துக்கொண்டே
யிருந்தனள் விசார மிட்டே யிவனுக்கென் சொல்வோ மென்று
பொருந்திய கங்குற் போது புலர்ந்துபுள் ளொழுந்த தார்த்தே. ()

நாவித னெழுந்தி ருந்து நண்ணிய கத்திக் கூட்டைத்
தாவெனக் கத்தி யொன்று தன்னையங் கெடுத்துப் போட்டாள்
தேவிமேற் கோப மாகித் திரும்பியங் கவனும் போட்டான்
பாவிநீ கெடுத்தாய் மூக்கைப் பதைத்திடச் சிதைத்தா யென்றாள்

கையினி லெடுத்த மூக்குங் கத்தியுங் காட்டிக் காட்டி
ஐயகோ விந்தவூரி லரசன்கே ளானோ வென்ன
வெய்யவன் றூதர் கண்டு விசித்துநா விதனைக் கொண்டு
தையலும் பின்னே செல்லத் தாணிகா வலன்முன் போனார். (66)

மன்னவன் றானு மிக்க மந்திரி மாரு நீயார்
உன்னைமூக் கரிந்த வாறே துரையெனப் பரத்தை வீட்டில்
பொன்னணி மார்பா போனேன் புலந்திருந் தேனிப் பாவி
என்னையோர் கத்தி யாலே யெறிந்துமூக் கரிந்தா னென்றாள். ()

நாவிதன் றன்னைக் கேட்க னானொன்று மறியே னென்றான்
நீவிரிங் கிவனைச் சூல நிலைக்கழு வேற்று மென்றான்
கூவியங் கவளை மூக்கைக் குறைத்தவன் வேறே யென்று
தேவசன் மாவி தெல்லாஞ் செப்பினான் வலிய வந்தே. (68)

தேவசன் மாவி னாலே தெளிந்துமந் திரியோ டாய்ந்து
நாவிதன் றனைவி டுத்து நரபதி தந்து வாயன்
தேவியை முலையு மூக்குஞ் சிதைத்தனன் றூதி யான
பாவியைப் புரியைச் சுற்றிப் படரொளி கொளுத்தி விட்டான். ()

இவ்வகை சொல்லக் கேட்டே கரடக னிதற்கு நாஞ்செய்
துய்வகை யேதிங் கென்னத் தமனக னுபாயத் தாலே
அவ்விரு வரையும் வெவ்வே றாகநட் புடைத்துக் காட்டைக்
கைவச மாக்கிக் கொள்ளக் கருதுவ துறுதி யென்றே. (70)

நந்திய காரி யத்தை நாடியே யெடுத்துக் கூட்டல்
வந்துறு மிடரைத் தம்பால் வராமலே தடைப டுத்தல்
முந்துற வருஞ்செல் வத்தை முயற்சியாற் றேடிக் கொள்ளல்
மந்திர விசார மூன்றும் வல்லவ னமைச்சா மென்றான். (71)

ஏகமா யிருக்குஞ் சிங்க விடபநட் புடைக்க நம்மால்
ஆகுமோ வென்ன வோகோ வருமையோ வுபாயத் தாலே
காகமோ ரரவைக் கொன்ற கதையறி யாயோ வென்ன
தாகமோ டுரைநீ யென்னத் தமனகன் சொல்ல லுற்றான். (72)

## காகம் நாகத்தைக் கொன்ற கதை

கோடுறு சினையிற் காகங் கூடுவைத் தனேக காலம்
பேடொடு கூடி வாழும் பெருமரப் பொந்தில் வந்தே
ஆடிய கரும்பாம் பொன்றங் கதுபெறு முட்டை யெல்லாம்
நாடியே குடித்துப் போட நலிந்துள மெலிந்து வாடி. (73)

தன்னுயிர்ப் பாங்க னான சம்புக னருகு போயிங்
கென்னசெய் குவனு னென்ன விதைக்கொல வரிதோ நீபோய்
மன்னவன் றேவி யாடு மஞ்சனச் சாலை புக்குப்
பொன்னணி கொண்டு வந்து போடுக பொந்தி லென்ன. (74)

காகமப் படியே செய்யக் காவல னேவ லாளர்
ஏகிமா மரத்தின் பொந்தை யீர்ந்தன ரீரும் போதில்
நாகமங் கிருந்து சீற நறுக்கின ரிருதுண் டாக
ஆகையா லுபாயத் தாகா திலையென வறையும் பின்னும். (75)

## சிங்கத்தை முயல் கொன்ற கதை

குறுமுயல் சிங்கந் தன்னைக் கொன்றதொன் றுண்டே தென்னிற்
செறியுமோர் காட்டி லேயோர் சிங்கமுண் டந்தக் காட்டில்
உறுவிலங் கனைத்தும் வேட்டை யாடியூன் மிகவுந் தின்று
வெறிகொடு திரியு நாளில் விலங்கெலா மொருங்கு கூடி. (76)

ஆணிளஞ் சிங்க மேயுன் னடவியில் விலங்கை யெல்லாம்
வீணிலே கொல்ல வேண்டாம் விதத்தினிற் றினமொன் றாக
ஊணுனக் களிப்போ மென்ன வுண்மையாக் கொண்டு சிங்கம்
ஆணையு மிட்டொவ் வொன்றா யருந்தியங் கிருக்கு நாளில். (77)

தனிமுய லொன்றுக் கோர்நா டன்முறை வருத லோடும்
இனியது விடாது நம்மை யெனினுமோ ரெடுப்பெ டுத்து
வினையையிப் போது செய்து வென்றுநா முய்ந்தோ மாகில்
நனிவிலங் கனைத்து முய்யு நமக்குநற் புகழுண் டென்றே. (78)

கருதியச் சிங்கத் தின்றன் கடும்பசி வேளை தப்பி
வருதலு முயலை நோக்கி மன்னனம் பசிவே ளைக்குப்
பெருமத வேழ மேனும் பிந்துவ தில்லை பிந்தி
வருவதென் னுரைநீ யென்று மனந்தனிற் சினந்து கூற. (79)

ஐயநின் பசித்த வேளைக் கடியனேன் வந்தே னங்கோர்
வெய்யசிங் கத்தைக் கண்டு வெருவியங் கொளித்தி ருந்தேன்
பையவே சிங்க மாங்கோர் பருமுழை புகுந்த பின்னர்
துய்யவுன் பக்கல் வந்தேன் சுவாமியென் றிறைஞ்சி நிற்க. (80)

சிங்கநா மல்லால் வேறோர் சிங்கநீ கண்டா யாகில்
அங்கதைக் காட்டு வாவென் றழைத்தலு மழைத்துப் போயோர்
பங்கமும் புனலுஞ் சேர்ந்த பாழ்ங்கூ வதனைக் காட்ட
அங்கதை யெட்டிப் பார்த்த ததனிழ லுருவந் தோன்ற. (81)

தன்னுரு நிழலைத் தானே சத்துரு வென்று பாய்ந்து
துன்னுபங் கத்த ழுந்தித் துளங்கியே யுயிரி ழந்த
தென்னலா லுபாயத் தாலே யாவையும் வெல்ல லாமென்
றின்னமோர் நண்டு கொக்கை யீர்ந்ததோர் கதையுஞ் சொல்லும்.

## நண்டு கொக்கைக் கொன்ற கதை

### வேறு

மீனொன்றையு மேதின்றுடல் மிகவேவளர் கொக்கு
தானங்கொரு பானண்டுத னைக்கண்டிரை கொள்ள
ஞானந்தரு மோனங்கொடு நண்ணும்படி கண்டப்
பானண்டிதை நீயிங்குறை பண்பேதுரை யென்ன. (83)

என்றென் றுரை செய்வேனினி யானெங்ஙன முய்வேன்
கொன்னுந்திய வலைகாரர்கள் கூடிக்குள மேரி
மன்னுந்தட மெல்லாமிக வளைந்தேவலை வீசிச்
சின்னஞ்சிறு பொடிமீன்முதற் சேரப்பிடித் தாரே. (84)

இந்தக்குள நாளைக்கென வெண்ணிக்கொடு போனார்
அந்தப்படி வந்தேபிடித் தவர்காவிலெ டுத்தே
சந்தக்கடை தொறுமீன்கடை தானேயென விற்பார்
எந்தப்படி யிவர்தப்புவ தெனவெண்ணி யிருந்தேன். (85)

அந்தப்பழி காரர்வரு முனமேயொரு பாயஞ்
சிந்தித்தன னானப்படி செய்தாலவை யுய்யும்
எந்தப்படி யானும்மழைத் திங்கேவரு வாயேல்
இந்தக்குளம் விட்டோர்குள மெய்தும்படி செய்வேன். (86)

என்றேபக ராசன்சொல வியனன்டதை நம்பிச்
சென்றேபல மீனோடுரை செயவேயவை கூடி
நன்றேயென வரவொவ்வொரு நடைக்கொன்றுகொண் டேகிக்
கொன்றேசில தின்றேசில கொடும்பாறையி லுலர்த்தி. (87)

அலவன்றசை தனையுண்டிட வதையுங்கொடு செலவந்
நிலமெங்கணு மீனென்புக ணிறைகொண்டது கண்டே
நலதிங்கிது பலமீனையு நனிதின்றது நமையுங்
கொலவந்தது நாமும்மிது கொலுமுன்கொலு வோமே. (88)

நம்மால்வரு பிழையேயிது நாமும்மந்த மீன்போல்
சும்மாவிருந் தனமேற்கொலு மதிலேயொரு சூழ்ச்சி
எம்மால்வகை வருமாறினி செய்வேமென வெண்ணி
அம்மாபகன் கழுத்தைக்கவை யடியானெருக் கியதே. (89)

நெருக்குண்டற வீழ்ந்தேகொக்கு நீங்கிற்றுயி ரலவன்
இருக்குந்தல மேகித்தனை தினத்தோடிருந் ததுவே
செருக்கும்பகை பெரிதாகிலுஞ் சிலதந்திர வகையால்
முருக்கும்படி நினைந்தாலதின் முடியாதது முளதோ. (90)

எனவேதம னகனோதிட விசைந்தேகர டகனிம்
மனமேகம தெனவேதினம் வாழும்மிவர் நட்போ
கனமானதந் திரத்தாலன்றிக் கலையாததற் கேற்ப
நினைவாய்தம னகநீயென நிகழ்த்தக்கர டகனே. (91)

வேறு

இன்னன பலவு பாய மியம்பியே தமன கன்றான்
தன்னிக ரிலாத சிங்கந் தனித்ததோர் வேளை பார்த்தங்
கன்னவன் பக்கற் சென்றே யடிபணிந் திருகை கூப்பி
மன்னவோர் தீங்கு கண்டு வந்தன னின்பா லென்ன. (92)

யாதுதீங் கினைநீ கண்டிங் கெய்தினை யுரைத்தி யென்ன
ஓதரு கருமஞ் சொல்லி னுனதுசித் தத்தில் வைத்த
காதலான் மெய்யும் பொய்யாக் காணுமோ தெரியா தென்றே
ஈதுநான் சொல்ல வஞ்சி யிருந்தன னின்று காறும். (93)

அவ்வகை யெண்ணி னுலு மல்லது கோபித் தாலும்
எவ்வகை தண்டித் தாலு மிறைவருக் கிடர்வா ராமல்
செவ்வைசேர் புத்தி சொல்லிச் செய்கரு மஞ்செய் வித்தால்
வெளவிய வெவ்வ ராவி மாய்ந்திடுந் திண்ண மன்றே. (94)

மந்திர விசாரத் தாலே மன்னவன் மயக்க நீக்கல்
தந்திர வுபாயத் தாலே சத்துரு நாசம் பண்ணல்
முந்திய செங்கோ னூலின் முறைதவ றாதி யற்றல்
இந்தவா றமைச்சர் நீதி யிவைசெயார் நரகில் வீழ்வார். (95)

ஐயநின் பழைய சேனை யமைச்சரை நீக்கி விட்டே
வெய்யகோட் டிடபந் தன்னை விரும்பிநீ யுறவு கொண்டு
மையலுற் றிருத்த லாலம் மாடர சாள வெண்ணிப்
பையவே யதற்கு வேளை பார்த்திருக் கின்ற தென்ன. (96)

மடங்கலு நகைத்தி தென்ன வார்த்தைநீ சொன்னாய் நம்மை
அடைந்துமுன் னமக்குச் சொன்ன வாணையும் வார்த்தைப் பாடுங்
கடந்துநம் மரசை யாளக் கருதுமோ கருதா தென்னத்
தொடர்ந்துநாம் விசாரி யாமற் சொல்லுவ தில்லை யென்றே. (97)

என்னெதி ராகத் தானே யிகழ்ந்துநின் சத்தி யெல்லாந்
தன்னது சக்திக்கீடு தானல வென்று மற்றும்
பன்னுவாய் மதங்கள் பேசிப் பகைநினைத் திருந்த தென்றால்
பின்னையு மிதிற்சந் தேகம் பேசில்யான் சொல்வ தென்னே. (98)

அரசரை யிகழ்ந்து வாழு மமைச்சரை யமைச்சர் தம்மைப்
புரைபடத் துரத்தி வாழும் புரவலர் தம்மை யென்றுந்
திருமக ளெனும டந்தை சேர்ந்தினி திருந்து வாழாள்
இருநிலக் கிழத்தி தானு மிவரைவிட் டகலப் போவாள். (99)

கோற்றவர் காரி யத்திற் குலமதி யூகந் தன்னால்
உற்றவர் தம்மை நீக்கி யொருவனை முதலா வைப்பின்
மற்றவ ராசை யெல்லாம் வெளவியே கொண்டு பின்னுஞ்
செற்றமுங் கூர்ந்து வேந்தைச் செறுத்திட நினைப்ப ரன்றே. ()

மூடருக் குபகா ரந்தான் முந்துறச் செய்து தம்மைப்
பீடுசெய் தவர்க்குத் தாமும் பெரிதுகைம் மாறு செய்யார்
நீடிய வுபகா ரங்க ணிகழ்த்தியே தமக்குத் தாமே
கேடுகெ டேடிக் கொள்வார் கேண்மையை நினைக்கொ ணாதே. ()

நஞ்சொடு கலந்த சோற்றை நடுக்குற வசைந்த பல்லை
வஞ்சகர் நட்பை மிஞ்சு மந்திரி தன்னைச் சற்றும்
மிஞ்சிட வைத்தி டாம லெடுக்கவே வேண்டும் வைத்தால்
அஞ்சிய துன்ப மெல்லா மாக்குமென் றறையக் கேட்டு. (102)

யாதுசஞ் சீவ கன்ன மிடத்தினிற் செய்த குற்றம்
ஓதுநீ யென்னச் சிங்கந் தமனக னுரைக்கு மோர்கின்
போதனை யன்றி யேதன் புத்திமேற் கொண்டு சொல்லுந்
தீதுட னுனையி கழ்ச்சி செய்தல்போ தாதோ வென்ன. (103)

தஞ்சமென் றடைந்த பேர்க்குத் தானப யங்கொ டுத்தே
வஞ்சக நினைத் துக் கோறல் வண்மையன் றுலகிற் சொல்லும்
பஞ்சபா தகத்தின் மூன்றும் பாதக மிதுவே மேலுங்
கொஞ்சமி னிரையந் தோறுங் குளிப்பவ ரிவரே கண்டாய். (104)

நாமதை விரும்பிக் கொண்ட நட்பலாற் பிறிதொன் றில்லை
தீமையங் கதுசெய் யாது செய்யினும் பொறுப்ப தன்றி
யாமிடர் செய்த றீதே யென்றுபிங் கலன்றான் சொல்லச்
சாமியிங் கிதுவேந் தற்குத் தகாதெனப் பின்னுஞ் சொல்லும். ()

அன்னிய ரேனுந் தொல்லை யமைச்சர்க ளேனு மற்றும்
மன்னிய சுற்ற மேனு மைந்தர்க ளேனும் வேந்தன்
முன்னியே யொருவர் மீதின் மோகம்வைத் திடில வன்பால்
துன்னிய வாசு மிக்க சுகமுந்தாங் கொள்வர் மன்னே. (106)

செல்வத்தி லாசை யில்லார் செகத்தினி லொருவ ருண்டோ
நல்வினை யில்லா வேற்றை நம்பியுன் செல்வ மான
பல்வகை விசாரிப் பெல்லாம் பரிந்துநீ யளித்தா யுன்னைக்
கொல்வகை யுபாய நெஞ்சிற் குறித்திருக் கின்ற தன்றே. (107)

நல்லறி வமைச்சர் புத்தி நஞ்சுபோ லிருந்து பின்னர்
எல்லையில் செல்வ மாகி யின்பமு முதவு நல்லோ
ரல்லவர் புத்தி முன்ன மமுதெனத் தோன்றிப் பின்னர்
ஒல்லையிற் செல்வ மின்ப முயிரையு மிழக்கப் பண்ணும். (108)

தனக்குரி யாரை விட்டுத் தான்பிறர்க் கமைச்சு நல்கு
மனத்தனு மரசன் பின்னை வறுமையாம் பரவை வீழ்ந்து
கனக்கவெந் துயர மான காரவின்வாய்ப் பட்டு மாழ்கி
இனத்தராம் புணைகா ணமை லிழப்பனு ருயிரை மன்னோ. (109)

நச்சுமா மரத்தை வைத்து நளிகட லமிர்தம் பெய்தும்
பச்சிலை முதலாக் கொல்லும் பாம்புபால் பெய்திட் டாலுங்
குச்சித விடத்தை நல்குங் குவிதசர்க் கரைமே னட்டு
மிச்சமாத் தேன்பெய் தாலும் வேம்புதன் கசப்பு மாறா. (110)

இன்னவை போலுந் துஷ்டர்க் கிதம்பல விதஞ்செய் தாலும்
பின்னுமங் கவர்துன் மார்க்கம் பெருகுநற் குணத்த ராகார்
அன்னரை மூலத் தோடே யழிக்கினுஞ் சயமாந் துஷ்டர்
மன்னுயி ரழித்தா லேதுன் மார்க்கமு மழியுந் தானே. (111)

வேந்தனுக் கபாயம் வந்தால் விளையுமுன் னறியப் பண்ணல்
போந்தவவ் வபாயந் தன்னைப் புத்தியி னாலே நீக்கல்
ஏந்தலோர் மோகத் தாலே யெண்ணமற் றிருந்தா னேனு
மாந்தக வுறுதி சொல்ல லமைச்சர்க ணீதி யாமே. (112)

எத்தனை விதஞ்சொன் னாலு மெள்ளள வேனு நின்றன்
சித்தமு மறிய வில்லை செய்வதொன் றறியேன் வேந்தர்
மத்தவெங் களிறு போல மனஞ்செலும் வழியே சென்று
மெத்தவும் விளைந்த தென்றால் வெறுப்பர்மந் திரியை யென்ன. ()

ஞாயினிவ் வாறு சஞ்சீ வகனைநான் கேட்பே னென்று
ஈயமங் குரைப்ப நல்ல சிந்தனை செய்தாய் சூழ்ச்சி
ஏயுமந் திரிவி சார மிதயத்தில் வைப்ப தல்லால்
வாயுறப் புறத்திற் சொன்னான் மரணமே திண்ண மாமால். (114)

குருவுப தேச மாதர் கூடிய வின்பந் தன்பால்
மருவிய நிதியங் கல்வி வயதுதான் செய்யுந் தன்மம்
அரியமந் திரிவி சார மாண்மையிங் கிவைக ளெல்லாம்
ஒருவரு மறிய வொண்ணா துரைத்திடி லழிந்து போமே. (115)

கடன்படிற் கொடுத்த சேடங் கனல்படில் விடுத்த சேடம்
விடந்தொடின் மீட்ட சேட மேவலர்ச் செற்ற சேடம்
படர்ந்துபின் கெடுக்கு முன்னே பற்றறக் களைந்து போட்டால்
இடம்பெறச் செல்வந் துய்த்துச் செருக்கிவாழ்ந் திருக்க லாமே. ()

என்பன சொல்ல நம்மை யிடபமென் செய்யு மென்றே
வன்பொடு சிங்கங் கூற மாட்டைநா நம்பப் போகா
தன்புட னருகிற் சேர்க்கி லழிவதே திண்ண மையா
முன்பொரு சீலைப் பேனார் முகட்டினா லழிந்த வாறே. (117)

சீலைப்பேன் மூட்டுப்பூச்சியால் அழிந்த கதை

இக்கதை யாது சொல்வா யென்றுபிங் கலனார் கேட்க
மிக்கதோர் நகரின் மந்த விசர்ப்பணி யரசன் மெத்தை
புக்கொளித் தன்னான் மின்னார் புணர்ச்சிசெய் துறங்கு மந்த
யக்குவம் பார்த்தி ரத்தம் பருகியங் கிருக்கு நாளில். (118)

கொள்ளிவா யடியிட் டாற்போற் குறுமுக டொன்று சேர்ந்தங்
குள்ளுறை சீலைப் பேனை யுறவுகொண் டுனக்கு நானே
தெள்ளிய நண்ப னாகிச் சேர்ந்தினி திருப்பே னென்ன
முள்ளெயிற் றினிற்று டுக்கா முன்னைநீ கடிப்பா யென்ன. (119)

துடுக்குநான் செய்கி லேனீ சொன்னது கேட்பே னென்று
பொடுக்கெனக் காலில் வீழப் புந்தியி லிரங்கி நீதான்
வெடுக்கெனக் கடிக்க வேண்டாம் வேந்தனு மனையா டானும்
படுக்கையி லுறக்க வேளை பார்த்துநீ பசிதீ ரென்ன. (120)

நல்லதென் றடைந்து பின்டிண் டிபனெனு நாம மூடு
மெல்லிய லுடனே தானும் விழித்திருக் கின்ற போதில்
பல்லினாற் கடிக்க வேந்தன் பதைத்தெழுந் தேதி தென்று
சொல்லலுந் தீபங் கொண்டு சோதனைக் காரர் பார்க்க. (121)

மூகடனா ரொளித்துப் போனார் முன்னமங் கிருந்து வாழும்
விகடமில் லாத வந்த விசர்ப்பணி தன்னைக் கண்டே
அகடுநீ செய்தா யென்றங் கதனுயி ரழித்துப் போட்டார்
வகையறி யாமற் செத்து மாய்ந்தது சீலைப் பேனே. (122)

என்றொரு கதையுஞ் சொல்லி யெருதினைப் போரவ ருங்கால்
துன்றிய மழையுங் காற்றுஞ் சூழ்ந்திடு வேளை தன்னில்
தன்றனி வான்மு றுக்கித் தலையொடு கொம்ப சைத்து
முன்றக நடுங்க வந்து மார்பினிற் பாயு மன்றே. (123)

சீயமா மாச னேநான் செப்பினே னுனக்கு நன்மை
நீயிதை வெளியி டாம னெஞ்சில்வைத் திடப முன்னைப்
பாயவந் துற்றா லாவி பதைத்திட வதைத்தி நானும்
போயிவண் வருவேன் பின்னர் புனிதவென் றேகிற் றம்மா. (124)

ஏகியே தமன கன்றா னிடபசஞ் சீவ கன்பால்
போகவங் கதுவுங் கண்டு புகழுடன் சுகமோ வென்ன
நாகிளங் காளை வேந்தே நமக்குமோர் சுகமு முண்டோ
ஆகமே துயரே தென்று மாசனைச் சேவிப் பார்க்கே. (125)

செல்வமுஞ் செல்வ மல்ல சிந்தையுஞ் சிந்தை யல்ல
சொல்வதுஞ் சொல்வ தல்ல சுகிப்பதுஞ் சுகிப்ப தல்ல
கல்வியுங் கல்வி யல்ல கடுங்கொலைப் பாம்பு போலக்
கொல்வள ரரசர் சேவை குறித்துவாழ் பவர்க்குத் தானே. (126)

எனத்தம னகனுஞ் சொல்ல விறைவர்நெஞ் சேற்கு மாறு
மனத்தில்வஞ் சகமி லாமன் மகிமையா நடந்து கொண்டால்
சினத்தமன் னவரா னாலுஞ் சினேகமாய் நமக்கு வேண்டும்
இனத்தினி லினத்தா ராக வெண்ணியே நடத்து வாரே. (127)

எனவிடை கூறச் செல்வ மெய்தினின் புறாதா ரில்லை
வனிதையர் காமந் துய்த்து வலியிழ வாதா ரில்லை
அனகவெஞ் சமனைத் தப்பி யாவியுற் றிருப்பா ரில்லை
மனதொடு வேந்தர் சித்தம் வரநடப் பாரு மில்லை. (128)

துச்சன ருடனே கூடிச் சுகமடைந் தாரு மில்லை
இச்சையா சகத்தி னாலே யிடருறா தவரு மில்லை
குச்சிதக் களவி னாலே கொழுநிதி யடைந்தா ரில்லை
அச்சமி லாச ராலே யழிபடா வாழ்வு மில்லை. (129)

நல்லிட நல்ல கால நற்பொரு ணல்ல தோழர்
சொல்லுமிவ் வகையுஞ் சற்றுந் துளக்கமில் லாத நெஞ்சும்
இல்வயின் யாவும் பெற்றா ரெய்துவர் சிலநாள் வாழ்க்கை
அல்லவ ரின்ன நாளி லழிவரென் றறிய லாகா. (130)

இவைகணீ சொல்ல வந்த தென்னபிங் கலன்றா னுன்பால்
தவறுதா னினைந்த துண்டோ சாற்றென விடபங் கூறக்
கவடமாய்ச் செயுமி ராச காரியந் தன்னைச் சொன்னால்
அவமதி வேந்தன் சற்றே யறியினு நமைக்கொல் வானே. (131)

என்னினு நீயு நானு மிதயமொன் ருகை யாலே
உன்னது கருமஞ் சொல்ல வுற்றனன் மற்றென் றல்ல
மன்னவன் சேனைக் கெல்லா மகிழ்விருந் தளிக்க நாளை
நின்னையே கொல்லு மாறு நினைந்தனன் மனத்தி லென்ன. (132)

அஞ்சியே மிகவுஞ் சஞ்சீ வகனுமெய் கலங்கி வேந்தன்
னெஞ்சினி லென்னைக் கொல்ல நினைத்தகா ரணமே தென்ன
எஞ்சினோர் மீதிற் கோப மியாவர்க்கு மெய்து மென்பார்
வெஞ்சின வேந்தர்க் குற்ற வெகுளியா ரறிய வல்லார். (133)

பரவையை யளவிட் டாலும் பாரெலா மளவிட் டாலும்
வரைமுழு தளவிட் டாலு மாதர்நெஞ் சளவிட் டாலும்
இறைதனைக் கருதித் தன்பா லெய்தினர் தம்மைக் கொல்லும்
அரசர்நெஞ் சொருவ ராலு மளவிட முடியா தென்ன. (134)

மின்னனார் தங்க ணெஞ்சம் விடரையே விரும்பி நிற்கும்
பொன்னெலா முலுத்தர் தேடும் பொருளையே சேர்ந்து நிற்கும்
மன்னிய மழையு மோத வாரியிற் பெய்து நிற்கும்
அன்னபோல் வேந்தர் தாமு மபாத்திரம் விரும்பி நிற்பார். (135)

காரணத் தாலே வேந்தன் கனன்றன னாகில் மற்றோர்
காரணத் தாலே யன்னான் கருத்தினைத் திருத்த லாகுங்
காரண மியாது மின்றிக் கனன்றன னாகின் மற்றோர்
காரணத் தாலே யன்னான் கருத்தினைத் திருத்த லாகா. (136)

வேறு

என்றுசஞ் சீவக னியம்ப மன்னவன்
அன்றுனை யழைத்தது மானை யிட்டதும்
இன்றுனைத் தனக்குளார்க் கிரைவ ழங்கவே
கொன்றிட நினைக்கதாங் கொடிய பாவமே. (137)

மந்திரி பண்டிதர் மருத்து வஞ்செய்வோர்
சிந்தையு மன்னவன் சிந்தைக் கேற்றிடில்
தந்திர வுபாயமுந் தரும நீதியும்
அந்தமி லின்பமு மவனுக் காகுமே. (138)

துட்டர்பா னன்றியே தொடர்ந்து செய்யினும்
முட்டர்பாற் சுபாஷித மொழிகள் பேசினும்
ஒட்டிய மூங்கைமுன் னுசிதஞ் சொல்லினும்
நட்டமே யல்லது நன்மை யில்லையே. (139)

நல்லறி வசேதனற் குரைப்ப துங்கொடும்
புல்லர்முன் றன்கலி புகன்றி ரப்பதும்
அல்லனோ யாக்கு மாதரை யளிப்பதும்
கல்லின்மே லெறிந்திடு கழங்குக் கொக்குமே. (140)

பெருங்களர் நிலத்தினிற் பெய்த மாரியும்
திருந்திலாச் செவிடர்பாற் செயுப தேசமும்
அருங்கொடி யோர்களுக் களித்த தானமும்
ஒருங்குற வோர்ந்திடி லொக்கு மென்பவே. (141)

சந்தன மரங்களைச் சலச வாவியைப்
பந்திகொ டாழையைப் பாம்பு வெங்கரா
நந்துமுட் சூழ்வபோ னுட்டு வேந்தரைத்
தொந்தமாய் விடாமலே துட்டர் சூழ்வரே. (142)

ஆதலின் மன்னவ ரருகு நல்லமெய்ப்
போதமே யடைந்தவர் பொருந்தி டின்மிகப்
பேதக மாக்கியே பின்னுங் கொல்லவும்
சூதுக ணினைப்பது துட்டர் நீதியே. (143)

### வேறு

அரச னின்சொலு மபய வார்த்தையும்
பரவு மிங்கிதப் பார்வை யின்பமுந்
திரம தாமெனச் சிந்தை யாரவே
கருதி ஞேமது கனிட்ட மானதே. (144)

ஐயை யோவிவ னபய வார்த்தையும்
மெய்ய தாமென விரும்பி ஞேங்கொலை
செய்ய வெண்ணினன் சிங்க மன்னவன்
கையி லாவது கருத னீதியோ. (145)

தூரக் கண்டுநீ தொழுமு னேதொழு
தாரப் புல்லிமோந் தருகில் வைத்துப
சாரத் தானுனைத் தருக்கச் செய்தது
சேரத் தான்கொலை செய்ய வெண்ணியே. (146)

இருளை நீந்த விளக்கு மெழுதிரைப்
பரவை நீந்தப் புணையும் படைத்துமிக்
கரவர் நெஞ்சினில் வஞ்சங் கடக்கவே
உரிய தொன்றையுண் டாக்கிலன் வேதனே. (147)

ஆனை வேக மடங்கிடுந் தோட்டியால்
வேனில் வெம்மை யடங்கும் விசிறியால்
ஈனர் வேக மியம்பி லவருயிர்
போன போதடங் கும்புவி மீதிலே. (148)

வண்டு பூமது விட்டுக் கரிமதம்
உண்டு காதடி பட்டுயிர் மாய்வபோல்
தண்டை வேந்தர்நல் லோர்சொன் மறுத்துமால்
கொண்டு தீயர்சொற் கொண்டுயிர் மாய்வரே. (149)

தூட்ட நண்பு தொடங்கினல் லோர்களும்
நட்ட மெய்துவர் நன்மை யவர்க்கிலை
இட்ட மாக விருந்தொரு காக்கையோர்
ஒட்ட கத்தி னுயிரை யழித்ததே. (150)

## காக்கை ஒட்டகத்தை அழித்த கதை

உரைசெ யக்கதை யென்றொரு தோதலும்
இருள்செய் காட்டின் மதோற்கட னென்னுமோர்
அரசு சிங்கம தற்குள மந்திரி
நாயும் வேங்கையுங் காக்கையு நண்ணுநாள். (151)

ஒட்ட கம்வழி தப்பியங் குற்றிடக்
கிட்டி வாயச மாரெனக் கேட்டலும்
ஒட்டை யுண்மை யுரைத்திட வாணையும்
இட்டு வாயசந் தானழைத் தேகியே. (152)

மன்ன னானம தோற்கடன் முன்விட
அன்ன மேவந்த னபயங் கொடுத்தினி
இன்ன லின்றிமந் தானக னென்றுபேர்
மன்னி மந்திரி மாரொடு வாழ்கென. (153)

சம்பு வும்புலி யுங்கொடி யும்மெமை
நம்பு கென்றுசெ லிச்சில நாளெலாம்
தம்பு லத்திற் சகோதர ராயென
இம்பர் போற்ற விருந்துடன் வாழ்ந்தவே. (154)

உரைசெய் சிங்க மொருதின நோய்கொடு
விரைசெய் வேட்டையின் மேற்செல வேறிருந்
திரைசெய் வேட்கையை யெய்தி யமைச்சரைப்
புரைசெ யன்பொடு நோக்கிடப் புகலுமால். (155)

பொங்கு வெம்பசி யேற்கிரை போய்க்கொணர்ந்
திங்கு நல்குமி னென்றுரை செய்திட
அந்த நான்கு மடவியெ லாந்திரிந்
தெங்கு மில்லை யிரையென வந்தவே. (156)

உற்ற நான்கினி லொட்டக மொன்றலான்
மற்றி ரண்டையும் வம்மின்க ளென்றுதான்
கற்ற பாடையிற் காக மழைத்துப்போய்க்
கொற்ற வேந்தன் சமுகங் குறுகியே. (157)

மன்ன னேயிவ் வனங்களெ லாந்திரிந்
தின்ன லுற்று மிரையொன்று மில்லையால்
உன்ன ருட்கொடு போய்ப்பிழைப் போமெனா
முன்னி வந்தன மென்று மொழியவே. (158)

யாது நுங்கருத் தென்றுசிங் கஞ்சொலக்
கோதில் வேந்தமந் தானகற் கொன்றிடிற்
போது மென்று புகலச் சிவசிவா
ஈது பாவ மெனச்செவி மூடவே. (159)

வாய சம்மது கண்டடன் மன்னகேள்
ஆய மன்னவர் செய்கையி தாகுநி
யாய மென்று நவில்குவன் யான்முனம்
மாய வன்சொலும் வாய்மையில் வாறரோ. (160)

ஒருவ னைக்கெடுத் தோர்குடி காக்கலாம்
ஒருகு டிகெடுத் தோர்நகர் காக்கலாம்
ஒருந கர்கெடுத் தோர்பெரு நாடெலாம்
ஒருபெ ருந்துன் புறுவகைக் காக்கலாம். (161)

என்று பஞ்சவர் முன்ன மியம்பவே
நன்றி கெதன்றவர் நன்மகன் றன்னையும்
கொன்று நின்று களப்பலி கூட்டியே
வென்றி யெய்தினெ ரென்று விளம்பவே. (162)

அபயம் வாங்கி யடைக்கலம் புக்கதை
அபய மாற்றி யழிப்பர்க ளோவென
அபய மீந்தவுன் ரைலழி யாமலுன்
அபயங் காத்தத லைதைக் கொல்வமால். (163)

என்று காக மியம்ப மதோற்கடன்
ஒன்று மூத்தா மோதில லைதை
நன்றி கெதன்ன நயந்தெநஞ் சொட்டகம்
நின்ற தோசிட நேடிவந் துற்றதே. (164)

அரசன் வெம்பசி யால்வருந் துற்றனன்
இறைமற் றியாது மினிக்கிடை யாதுநாம்
உரைசெய் வோமென நான்கு மொருமையாய்
அரசன் முன்சென் றடிகள் வணங்கியே. (165)

மன்ன னேயிவ் வனத்தி லிரையிலை
என்னை நீகொன் றிரையருந் தென்றுமுன்
சொன்ன காகத்தை நோக்கி மதோற்கடன்
என்ன நின்னுடல் சின்னதென் றேசொல. (166)

ஆயி னென்னை யழுந்தெனச் சொன்னகோ
மாயு வோதவவ் வாறு மறுத்திடப்
பாயும் வெம்புலி தன்னைப் பருகென
நீயு மெற்கு நிரம்பிரை யோவென. (167)

கதன கன்னிதைக் கண்டு நமைக்கொல
விதனம் வைத்தன ரென்று விரைந்துநான்
அதிக னென்னை யருந்தெனச் சொல்லுமுன்
பதறி வெம்புலி பாய்ந்திட மாய்ந்ததே. (168)

சிங்க மெண்ணி யறிந்துசெந் நீருணத்
துங்க வெம்புலி மூளையைத் துய்த்திட
எங்கள் சம்புக னீரல் விருந்துணத்
தங்கு காகந் தசைக ளயின்றதே. (169)

கோடிய ரோடெவர் கூடினு மாங்கவர்
மடிவர் திண்ணமிவ் வாறென்று சொல்லுவார்
கொடிய வேந்தர்கை யிற்கொலை யுண்ணலின்
நெடிய போரி லுயிர்விட நீதியே. (170)

போரி லாவியைப் போக்கிற் சுவர்க்கமும்
போரில் வென்று பிழைத்திடிற் பூமியுஞ்
சேரும் வீணி லுயிர்விடிற் சொர்க்கமும்
பாரு மில்லை நிரையம் படிவரே. (171)

போருந ரோடு பொருதுயிர் மாய்பவர்
இருநி லத்து ளிறந்து மிறந்திலார்
வெருவி யாவி விரும்பி யிருப்பவர்
தரையின் மேவுசஞ் சாரப் பிரேதமே. (172)

அறிவி லார்தம தாண்மையி னுற்பிறர்
சிறிய ரென்று தஞ் சிந்தை நினைப்பது
மறிதி ரைக்கடன் மன்னவன் முன்னமோர்
குறிய சிட்டைக்கு றித்தது போலுமால். (173)

## கடலைச் சிட்டு வென்ற கதை

விடைய தேதக் கதையென வேலையின்
புடையின் மேய்ந்திடுஞ் சிட்டுப் பொருந்திய
பெடையுந் தானும் பிரிவின்றி யாங்கொரு
செடியின் கீழிற் சிலநா ளிருந்ததே. (174)

என்ன நாளிற் பெடைசினை யாய்முதிர்ந்
தென்ன புத்தி யெனக்கிட மேதென
மன்னு மிவ்விட மன்றிமற் றோரிடம்
பின்னை யில்லெனச் சேவலும் பேசவே. (175)

பொருக டற்கரை தன்னிற்பொ ருந்தியே
அருகு முட்டையை யிட்டுவைத் தாலதைத்
திரையெ டுத்துக்கொண் டேகிலென் செய்குவோம்
உரையெ னச்சிறு பேடின்றே றுதவே. (176)

பேடி போவெனப் பெண்புத்தி யிக்கரை
நாடி யக்கட னம்மையெண் ணுமலே
ஆடி முட்டைகொண் டேகி லதுபடும்
பாடு நாயும்ப டாதென்று சாற்றவே. (177)

என்ன புத்திநீ யெண்ணி யுரைத்தனை
அன்ன முற்படச் சொன்னதை விட்டுயிர்
தன்னை யாமை தரையில் விடுத்ததால்
என்ன வக்கதை யேதுரை யென்றதே. (178)

## ஆமை சொற்புத்தி கடந்து இறந்த கதை

[வேறு]

விகடசங் கடமென்னு மனனத் தோடே
மேவுகம் புக்கிரீவ னென்னுமாமை முன்னர்
சுகமுடனே யொருகுளத்தி லனேக நாளாத்
தோழமையா யிருக்கமழை சொரிவி லாமல்

அகல்குளமும் புனல்வற்றிப் போகை யாலே
யப்புறமோர் குளநாடிப் போக வன்னம்
பகரிய வாமைதனை யழைத்திக் கோலைப்
பற்றிவாய்த் திறவாதே வருக வென்றே. (179)

இருபுறமுந் தாங்கவ்விக் கொண்டு வானி
லெழுந்துபறந் ததுகொடுபோம் வழியிற் கண்டோர்
கருதியிது புதுமையென நகைத்து நின்று
கைகொட்டிப் பார்க்கவந்தக் கமட னாரும்
மருவுநகை யேதென்று கேட்க வெண்ணி
வாய்திறந்து கீழ்விழுந்து மடிந்து போனார்
ஒருமையுளார் சொன்னதுகே ளாத பேர்க
ளுறுங்கரும மிவ்வாறென் றோதிப் பின்னும். (180)

## மும்மீன் கதை

சேவலது கேட்கமற்றோர் கதையுண் டென்னச்
செப்புகவக் கதையென்னப் பேடு கூறும்
காவுபுனற் குளமொன்றங் கதிலே மும்மீன்
வாழ்ந்தவவை தம்முளொன்று வருமுன் காப்போன்
தாவுசெயன் மற்றொன்று வருங்காற் காப்போன்
சாற்றிடின்மற் றொன்றுவந்த பின்காப் போனும்
ஓவறவே யனேகநா ளிருந்து பின்ன
மொருநாளில் வலைஞர்புக லுரையைக் கேட்டே. (181)

இந்தவிடம் விட்டுமற்றோ ரிடத்திற் செல்வோ
மென்றுவரு முன்காப்போ னிசைப்ப வம்மீன்
வந்தபொழு தாகவதற் கிப்போ தேநாம்
வழிபார்க்க வேண்டுமோ விடைச்சி தானே
அந்தமுடன் சோரரிரு வரையும் வீட்டி
லவள்கணவன் கண்டுமவ னறியா வண்ணந்
தந்திரமொன் றாலவரைத் தப்ப விட்டுத்
தானுமவ னைப்புணர்ந்து தருக்கி னாளே. (182)

## இடைச்சி சோரபுருடரைக் காத்த கதை

கள்ளமாப் பிணையிருவ ரவரா ரென்றாற்
  கருதுதண்ட பாசனவன் காளை தன்னோ
டுள்ளமகிழ்ந் தவள்கூடி யிருக்கு நாளி
  லொருநாளி லவன்றந்தை யுற்ற வேளை
மெள்ளவவன் காணுமுனங் கவனைத் தொம்பை
  மேவுவித்தங் கவனுடனே மேவுங் காலை
வள்ளலெனும் புருடன்வரச் சண்டை போலே
  வைதுகொண்டு போவென்றே வழிவிட் டாளே. (183)

அப்படியே வைதுகொண்டு விரைந்து போனா
  னகத்திடைய னிவண்வரக்கா ரணமே தென்றான்
எப்படியோ விவாரோ வறியேன் கையி
  லெடுத்ததடி யுங்கொண்டு துரத்தி வந்தான்
தப்பியொரு பயலோடி வந்து வீழ்ந்து
  தாயேயுன் றஞ்சமென்றிங் கொளித்துக் கொண்டான்
கைப்பிடித்த தடியுடனே தேடித் தேடிக்
  காணமற் கருவிக்கொண் டேகி னானே. (184)

என்றுசொல்ல நன்றுசெய்தா யென்ன வீட்டி
  லிருந்தவனை யழைக்கவவன் வெளியே வந்தான்
ஒன்றுமில்லை யவன்போனா னீயும் போவென்
  றுரைத்தனனங் கவனுமெள்ள வோடிப் போனான்
இன்றுநமக் கென்னதுன்பம் வந்த வேளைக்
  கேற்றபடி செய்வமென வருமுன் காப்போன்
அன்றுமற்றோர் தடமேக மற்றை மீன்க
  ளகலாம லச்சுனையி லிருக்கும் போது (185)

மற்றைநாள் வலைபோட்டார் வருங்காற் காப்போன்
  வலைதனிலே யகப்பட்டு மரித்த தேபோல்
உற்றதுமற் றதையெடுத்துக் கரைமேற் போட்டே
  யொருதரம்பின் வீசவந்த பின்னே காப்போன்

கொற்றவலைக் குள்ளாகிப் பதைத்துப் பாயக்
கொன்றுவிட்டா ரதற்குள்ளே குளத்து நீர்தான்
வற்றும்வாய்க் காலுடனே புனலிற் பாய்ந்து
மறுகுளத்திற் புகுந்திருந்து வாழ்ந்த தன்றே. (186)

என்றுசொலச் சேவனமக் கிடமு மீதே
யிவ்விடத்தே நீயுமுட்டை யிடுவா யென்னத்
தன்றுணையு முட்டையிட விவைக ளெல்லாஞ்
சமுத்திரரா சனுங்கேட்டுச் சமர்த்தைப் பார்ப்போம்
என்றுமுட்டை தனையெடுத்துப் போனு னப்போ
தெமதுமுட்டை யினைச்சும்மாத் தந்தா லுய்ந்தாய்
இன்றுதரா திருந்தாயேற் கடலே துன்ப
மெய்துவிப்பே னெனப்பேசா திருந்த தன்றே. (187)

அக்கணமே தன்னினங்க ளெல்லாங் கூட்டி
யகிலத்திற் பலபறவைச் சாதி யெல்லாம்
ஒக்கவரச் சென்றுபட்சி ராஜன் முன்போ
யுவணதேவா பறவைக்கு லங்கட் கெல்லாம்
மிக்கவொரு பெரும்பழியாச் சமுத்ர ராசன்
மிகையுடனே முட்டைகொண்டா னந்த முட்டை
இக்கணமே யழைப்பித்தா லன்றி யாரு
மெண்ணுர்நங் குலத்தையென்றே யிரங்கிக் கூற. (188)

கருடனுமங் கதையபிமா னித்துக் கொண்டு
கண்ணர்திருச் சந்நிதியிற் கழறக் கேட்டே
பொருகடல்வேந் தனையழைத்து முட்டை கொண்டு
போனதென்ன லிந்நேரங் கொண்டு வந்தே
குருவிகையிற் கொடுத்தாலே நல்ல தின்றேற்
குறையுனக்குண் டெனக்கூறக் குலைந்து நெஞ்சம்
வெருவிமுட்டை கொண்டுவந்து கொடுத்தா னென்றுன்
மேதினியிற் றந்திரம்போல் வேறே தென்றும். (189)

இப்படியே நரிசொல்லும் புத்தி யெல்லா
மிடபமுண்மை யெனமனதி லெண்ணிக் கொண்டே
ஒப்பரிய சிங்கத்தைப் பொருது கொல்லு
முபாயமெவ்வா றெனச்சிங்க முன்னைக் கொல்ல
வெப்பமுடன் கண்சிவந்தே யுடல்கம் பித்து
வெள்வாயுந் திறந்துசண்டை முடுகி னீயும்
அப்பொழுதுன் வாலெடுத்துத் தலையுங் கொம்பு
மசைத்துக்கொண் டெதிரேசென் றமர்செய் வாயே. (190)

என்றுபுத்தி சொல்லிவைத்துக் காட கன்பா
லேகியதற் குறைத்தாசன் பக்கற் சென்றே
இன்றுகொல்ல வருதிடப நீயு மெத்த
வெச்சரிக்கை யாயிருத்தி யென்று மீளக்
குன்றுநிக ரிடபமெதிர் வந்தே யந்தக்
கொடியசிங்கம் பொரவிருந்த கொள்கை கண்டே
வென்றிதைநாங் கொல்வோமென் றெண்ணித் தானும்
வெகுண்டுதுள்ளி வந்துசமர் விளைத்த தன்றே. (191)

விண்ணதிர மண்ணதிரக் கடலி னோடு
வெற்பதிர வொன்றொடொன்று பொருதல் கண்டு
துண்ணெனநெஞ் சகநடுங்கி யாசக் கிந்தத்
துன்பம்விளைந் ததுசுவாமித் துரோக மன்றோ
கண்ணெதிரே கண்டுமனங் களித்தா யென்று
காடகன்றன் றமனகனைக் கழறிப் பேதம்
பண்ணினது போதுமினி விலக்கி நட்புப்
பண்ணுவது கருமமென்றே பகர்ந்து பின்னும். (192)

பிரித்திடுதல் பிரியாமற் பேணிக் கொள்ளல்
பிரிந்தவரை முன்போலப் பேத மின்றிப்
பொருத்திடுத லிவைமூன்றும் வல்ல பேரே
புவிமீதி லமைச்சர்களாய்ப் புகழ்கொள் வார்கள்

பெருத்தாச ரின்பமுற்ரு லமைச்ச ரின்பம்
பெறுவரவர் துன்பமிவர்க் காகும் பின்னைக்
கருத்திலவர் மர்மம்வைத்தா லவர்சே னைக்குங்
காவலருக் குந்தமக்கும் வருங்கே டென்றே. (193)

ஒருமையிலா மற்றருமந் தேடு வாரு
முற்ருரைக் கெடுத்துநிதி தேடு வாரும்
மருவுசுகத் தால்வித்தை தேடு வாரும்
வலிமையினுன் மாதரின்பந் தேடு வாரும்
இருவருயி ரொன்றெனவே கூடி வாழ்ந்தங்
கிருப்பவரை நாங்கெடுப்போ மென்று நெஞ்சில்
கருதியவர்க் கின்னல்பல தேடு வாரும்
காசினியி லின்பமெய்தார் கதியெய் தாரே. (194)

## துஷ்டபுத்தி கெட்ட கதை

துட்டபுத்தி யென்பவன்ருன் பிதாவுந் தானுந்
துஞ்சினு னென்னனுமக் கதையே தென்னப்
பட்டணமொன் றுண்டதிலே வணிக ரீன்ற
பாலரிரு வோரொருவன் றரும புத்தி
துட்டபுத்தி மற்றொருவ னிவர்கள் கூடித்
தூரத்தி னிதிதேடப் போனு ரங்கே
இட்டமுடன் றருமபுத்திக் காயி ரம்பொன்
னெய்தவவன் றனக்கெய்தா திடருற் ருனே. (195)

ஆயிரம்பொன் கிடைத்திருந்தும் விசார மென்ன
வைந்நூறைந் நூருகப் பகுந்து கொள்வோம்
நீயிரங்க லென்று தர்ம புத்தி வைத்த
நேசத்தா லங்கவனைக் கூட்டிப் போக
நியாயமல்ல விதையூரிற் கொண்டு போத
லமிந்த மரத்தின்கீழ்ப் புதைத்து வைத்துப்
போயிதனை மற்றொருநா ளெடுத்துப் போதல்
புத்தியென்றே துஷ்டபுத்தி போதித் தானே. (196)

அன்னவன்சொற் படிகேட்டோர் மரத்தின் கீழே
யாயிரம்பொன் னையும்புதைத்து வைத்துப் போனார்
பின்னிரவிற் றுஷ்டபுத்தி கொண்டு போனான்
பிறகொருநா ளிருவருமாய்க் கூடிக் கொண்டு
பொன்னிருந்த விடம்பார்த்தார் காணார் துஷ்ட
புத்திநீ யிதையெடுத்துப் போக லாமோ
வென்னவவ னீயெடுத்துப் போனா யென்ன
விருவரும்போய் வழக்கர்முன்ன மியம்பி னாரே. (197)

ஒருவர்மே லேயொருவர் சாற்ற வந்த
வூர்வழக்கர் சாட்சிபிற ருண்டோ வென்ன
விருவருமே யறிந்ததல்லாற் பிறரங் கில்லை
யென்றுதர்ம புத்திசொல்ல விதற்குச் சாட்சி
மரமுரைக்கு மென்றுதுஷ்ட புத்தி சொல்ல
வழக்கரெலா மதிசயமாய் மரத்தைக் கேட்போ
மிருள்விடிந்த பின்வாரு நீவி ரென்றூ
ரில்லிடத்துக் கவரவரு மேகி னாரே. (198)

துட்டபுத்தி தன்னுடைய பிதாவை யந்தத்
தொன்மரப்பொந் தொளித்திருந் கூறு கென்ன
கட்டம்வரு நீநினைத்த நினைவி னாலே
நமக்கின்று முன்னமொரு நாகங் கொக்கின்
முட்டைதனைக் களவுகொள்ளக் கொக்கு நண்டின்
மொழிப்படியே கீரிவளை தொடுத்துப் பாம்பின்
வட்டவளை மட்டாக மீனைப் போட
வந்தொருகீ ரியும்பாம்பை வதைத்த தென்ன. (199)

தந்தையுரைத் ததுங்கேளான் வலிமை யாலே
தானிழுத்துப் போயிருளிற் றருவி னுழ்ந்த
பொந்தினுள்ளே யங்கவனை வைத்து மீளப்
பொழுதுவிடிந் ததன்பின் வழக்கர் கூட

வந்துநின்று கேட்கவவன் தர்ம புத்தி
வணிகனெடுத் தானென்றே கூற லோடுஞ்
சிந்தையதி சயமாகி வழக்க ரீது
செப்பினது புதுமையென்றே செப்பி னாரே. (200)

இதுகபட மென்றுதர்ம புத்தி யெண்ணி
யேறிமரப் பொந்திலெரி தழலை மூட்ட
அதிலிருந்த கிழவணிகன் பதைத்து வீழ்ந்தே
வையகோ துஷ்டபுத்தி கெடுத்தா னென்ன
மதியுடைய வழக்கரும்போ யரசர் முன்னே
வருத்தலுமங் கவன்றன்னை வதைத்தார் தந்தை
குதிகொள்ள லால்வெதும்பி மாய்ந்தான் பொன்னும்
குறையாமற் றர்மபுத்தி கொடுபோ னானே. (201)

## இரும்பை எலி தின்றது என்ற கதை

என்றுமொரு பட்டணத்திற் செட்டி மார்க
ளிருவரவர் சினேகமா யிருக்கு நாளில்
ஒன்றுதுலா மாயிரமா மிரும்பு கொண்டே
யொருவணிகன் வசத்தொருவன் வைத்துப் போய்நாட்
சென்றுவந்தான் வருமுன்னே யிரும்பை யெல்லாம்
தின்றுவிட்ட தெலியென்றே செப்பக் கேட்டு
நன்றதற்கு வந்ததென்ன போகு தென்று
நண்புகொண்டு முன்போல நண்ணி னானே. (202)

விருந்துசமைத் தார்களெண்ணெய் தேய்த்துக் கொண்டு
மிக்கவவன் பிள்ளைதனக் கெண்ணெய் தேய்த்துப்
பொருந்துகுளந் தனின்மூழ்க வென்றே யந்தப்
புதல்வனையுந் தான்கூட்டிப் போனா னங்கே
திருந்தியதோ ரிடத்தொளித்து வைத்து மூழ்கி
திரும்பிவந்தான் பிள்ளையெங்கே யென்றான் பிள்ளை
பருந்தெடுத்துப் போச்சுதென்றான் சண்டை யாகிப்
பட்டணத்து வழக்கர்முன்னே பகர்ந்தா னின்றேன். (203)

பருந்துபிள்ளை தனையெடுத்துப் போமோ வென்ன
பரிகாச மென்றுவழக் காளர் சொல்ல
இரும்புதுலா மாயிரத்தைத் குறைவை யாம
லெலிதின்றாற் பிள்ளைபருந் தெடாதோ வென்னக்
கரும்பொன்னை னதைமுழுதுங் கொடுத்தா யாகிற்
கடுகவவ னுன்பிள்ளை கொடுப்பா னென்றார்
இரும்புவிலை குறைந்ததனு லாஸ்தி விற்றே
யினியபெண்டீர் பிள்ளையும்விற் றிழந்து போனான். (204)

ஆங்கயினாற் கவடுசெய்வார்க் காவ தில்லை
யறிவுடையோர்க் கொருதாஞ்சொன் னற்போ தாதோ
நீகருத்தி லொருசிறிது மெண்ணாய் சொல்லும்
நீதிகல்லுக் குரைத்தவா றொக்கு மென்று
வேகமுடன் கரடகன்கோ பிக்க வந்த
விகடநெஞ்சத் தமனகனும் வேந்தன் பக்கற்
போகவுதற் குள்ளேபிங் கலன்றா னந்தப்
பொலியெருதைக் கொலைசெய்து புலம்பி நின்றான். (205)

புலம்பியபிங் கலன்முன்னே தமன கன்போய்ப்
பொருமவனைக் கொன்றுபுலம் புவதே னென்ன
நலம்பயனி லாதநச்சு மரமா னாலும்
நாம்வளர்த்து நாந்தறிக்க லாமோ வென்றும்
நிலம்புகழு மந்திரியைக் கெடுத்தா லந்த
நிருபனுக்குக் கேடுவரு மென்றுங் கூறக்
குலம்பெறுதன் பிள்ளைபிதா தமையன் மந்த்ரி
கொலைகருதி லவர்தமையுங் கொல்ல லாமே. (206)

கிருத்தியுத்தி னடவாதார் தம்மைத் தன்சொற்
கேளாத மனையாளைக் கவடு தானே
கருத்திலெண்ணி யிருக்குமொரு தோழன் றன்னைக்
கடும்போரிற் புறங்கொடுக்குஞ் சேனை தன்னைப்

பெருத்தமதம் பிடித்திருக்கு மமைச்சன் றன்னைப்
 பின்முன்பா ராதழித்தல் பெரிய நீதி
உரைத்தவிவ ரான்மருவு சுகத்தை யெண்ணு
 ருலகாளும் வேந்தரென்ப ரோதுங் காலே. (207)

என்றுதம னகன்பிங்க லன்ற னெஞ்சி
 லிரக்கமெலாந் தவிர்வித்தே யிகலி யன்னான்
கொன்றவிட பத்தினுட றன்னை யப்பாற்
 கொண்டுபோய்க் கரடகனுந் தானு மாகத்
தின்றுபல நரிகளுக்கும் விருந்து மிட்டுச்
 சிந்தைகளித் திருந்ததென் றுந் தேயத் தார்கள்
வென்றிபெறன் மந்திரியூ கத்தி லென்றே
 வேந்தன்மக னிடன்மறையோன் விளம்பி னானே. (208)

முதலாவது தந்திரம்

## மித்திரபேதம்

முற்றிற்று.

---

இரண்டாவது தந்திரம்

## சுகிர்ல்லாபம்

(தங்களுக்குச் சமானமானவர்களோடு கூடிப் பகை யில்லாமல் வாழ்ந்திருத்தல்)

**[Associating with equals and living cordially with them]**

பொன்னலர்ந் திகழுந் தில்லைப் பொதுவினின் றடு மெந்தை
தன்னடி பணிந்து பஞ்ச தந்திர வுபாயந் தன்னின்
முன்னரே மித்ர பேத முறைபல வுரைத்தோ மிப்பால்
பன்னருஞ் சுகிர்ல்லா பத்தின் பகுதியின் றகுதி சொல்வாம். (1)

மித்திர பேத மார்க்கம் வேதியன் கூற மைந்தர்
இத்திற நமக்கு முன்னாள் யாவரு முரைப்பா ரில்லை
உத்தம நீயே மேலு மோதிய சுகிர்ல்லா பந்தான்
எத்திற முரைத்தி யென்ன வியம்புவான் சோம சன்மா. (2)

## காகம் எலி ஆமை மான் இவை வேடனை வென்ற கதை

காகமொன் றெலியு மொன்று கமடமு மொன்று மானும்
ஏகமிங் கிவைக ணட்பா யிருந்துவே டனைமுன் வென்று
மோகமா யனேக கால முயங்கியே யொருவ னத்தில்
ஓகைகூர்ந் திருந்த வென்ன வுரைத்திடக் கதையே தென்றார். (3)

தெள்ளிய திரைநீர்க் கோதா வரிநதித் தீரஞ் சூழுங்
கள்ளவிழ் வனத்துக் குள்ளோர் கருக்குமுள் ளிலவில் வாழும்
புள்ளினுக் கதிக மான புத்தியுத் தியின தாகி
எள்ளவில் லாதி ருக்கும் லகுபத னென்றோர் காகம். (4)

வைகறை யெழுந்து தங்கள் வகையினத் துடனே யாங்கோர்
பொய்கையின் மூழ்கி யேறிப் புணர்சிற குலர்த்தும் போது
கைகளில் வலையும் வில்லுங் கணைகளுங் கொண்டு வேடன்
செய்கொலை பயில வங்கே சேர்ந்தன னவனைக் கண்டே. (5)

பறந்தன காக மெல்லாம் லகுபத னொன்று மாங்கே
மறைந்திவன்கொடியோன்செய்யும் வகையெலாமறிவோமென்ன
அரைந்தொரு பொதும்பர்க் குள்ளே யொளித்துப்பார்த் திருப்பவா
சிறந்ததோர்வலையைச்சூழ்ந்து தீனியுந்தெளித்துவைத்தான். [ங்கே

வைத்தவன் மறைந்தி ருக்குஞ் சமயத்தின் மன்ன னான
சித்திரக் கிரீவ னென்னும் புறாவொன்று சேனை சூழப்
பைத்தவவ் வனத்திற் போந்து பாங்கொரு மாத்தி றங்கி
மொய்த்தவத் தானி யத்தை முற்படக் கண்ட தன்றே. (7)

கண்டவப் புறவின் வேந்து கருத்தினி லாய்ந்து தன்பால்
கொண்டநற் பரிவா ரத்தைக் குறித்தது கூறு மிந்த
உண்டகு தானி யந்தா னுற்றதெவ் வாறிக் கானில்
எண்டரு மொருவர் யாரோ விறைத்துவைத் திருக்க வேண்டும். ()

[illegible]துந்த மறியு முன்னே யிவ்விரை விரும்பு வோமேல்
தீதுவந் திடும்பொன் காப்பிற் சிந்தையைத் தந்த ஞாளன்
காதுவெம் புலியான் மாய்ந்த கதையுள தெனப்பு றாக்கள்
ஓதுக வதனை யென்ன வுரைத்திடுங் கபோத வேந்தன். (9)

## புலியால் பிராம்மணன் மரணமடைந்த கதை

மூப்புடைப் புலிதா னொன்று மூழ்கியோ ரேரி யின்கீழ்க்
காப்புடன் றருப்பை தன்னைக் கையில்வைத் திருக்கும் போது
நாப்புடை மறைவ லாள னண்ணியவ் வழியிற் செல்லக்
கூப்பிடல் செய்தன் னோனைக் குறித்தந்தப் புலிதான் கூறும். (10)

அந்தணா விந்தக் காப்பை யளிப்பனீ வாவென் றோதச்
சிந்தையில் வேட்கை கூர்ந்து செப்புவான் புலியா ரேநீர்
வெந்துயர்க் கொலைமாந் தர்க்கு விளைப்பது விட்டுத் தானம்
எந்தநல் வழியிற் செய்வீ ரெனக்கதை கூறு கென்றான். (11)

புலியது கேட்டு நானோ பூசுரா நகமும் பல்லும்
இலன்கிழ மானேன் பாவ மிழைப்பது விடுத்து நாளும்
பொலிதரு தானஞ் செய்கை பொருளெனக் கொண்டே னஞ்சேல்!
சலமதின் மூழ்கி வந்து தருமிதைக் கொடுபோ வென்ன. (12)

நன்றென மறையோன் மூழ்க நண்ணினா னேரி நீரில்
அன்றவன் கால்கள் சேற்றி லழுந்திடத் திகைத்து நின்றான்
சென்றது புலிநா னுன்னைச் சேற்றினின் றெடுப்பே னென்னக்
கொன்றது குருதி தன்னைக் குடித்ததென் றுரைத்த தன்றே. ()

அப்படி சொலப்புறாவொன் றகஞ்செருக் குற்றுக் கூறும்
இப்படி யெல்லாம் பார்க்கி விரைபெறு திறக்க வேண்டும்
எப்படி யெக்கா லத்தி லெய்துவ தெய்து மென்று
செப்பலும் புறாக்க ளெல்லாஞ் சென்றந்த வலையிற் பட்ட. (14)

ஆங்கது கபோத வேந்த னல்லலி னோக்கி யந்தோ
ஈங்கிவை யெல்லா மாள விருந்துயிர் வாழ்வ னோநான்
தாங்கிய வலையிற் பட்டுச் சாவதே தக்க தென்று
போங்கடு விசையிற் சென்று பொள்ளென வீழ்ந்த தன்றே. (15)

இடுக்கண்வந் துற்ற தென்ன விதையினித் தப்பு மாறு
பொடுக்கென வலையைக் கொண்டு போவதே கரும மென்று
திடப்படச் சொலக்க போதச் சேனைக ளொருங்கு கூடி
எடுத்துநீள் வலையைக் கொண்டே யேகின விசும்பி னம்மா. (16)

வேடனு மதிச யித்து விரைந்துபின் னடந்தோ மாகில்
ஓடியே யிளைத்து வீழு மொருங்குடன் வளைந்து கொண்டு
சாடலா மெல்லா மென்று தன்மனத் தெண்ணிக் கொண்டே
ஓடினன் கண்ணிற் காணா தோடின புறாக்க ளன்றே. (17)

காகமுங் கூடி யோடக் கானவன் களைத்து மீண்டான்
ஏகின கபோத மன்ன னெமதுநற் றோழ னான
ஆகுவா மிரணி யன்வா ழடவியிங் கிதுவே யப்பாற்
போகலா காதென் றங்கே பொருந்திவந் திறங்கும் போது. (18)

இரணியன் கண்டு கூட்ட மேதென வளையிற் செல்லக்
கரவுறு வளையி லந்தக் கபோதமு மூக்கை வைத்து
விரகுள நண்பா வென்று விளித்தலுந் தெரிந்து வந்து
பரவியீ தேது கண்ணி பட்டவா றென்னோ வந்தோ. (19)

இறந்தது நிகழ்ந்த தும்பின் னெதிர்வது மான காலம்
அறிந்தநீ யேதி னாலே யடர்வலைப் பட்டா யென்னச்
சிறந்தபே ரறிவி னாலுஞ் செப்பிய சமர்த்தி னாலுந்
துறந்தவர் யாவர் சொல்லாய் தொல்லைவல் வினையைத் தானே. ()

எவ்விடத் தெக்கா லத்தி லெவ்வகைக் கார ணத்தின்
எவ்வள வெவ்வா றேதா னிருவினை யனுப வங்கள்
அவ்விடத் தக்கா லத்தி னவ்வகைக் கார ணத்தின்
அவ்வள வவ்வா றேதா னனுபவ மெய்து மன்றே. (21)

என்றுதான் கபோதஞ் சொல்ல விரணியன் கடலின் மீனும்
துன்றுமா காயப் புள்ளுந் தொடர்வலைப் படுத லாலும்
குன்றுநேர் களிறும் வெய்ய கொலைபயி லரவு தானும்
நின்றுகட் டுண்டு நெஞ்ச நிலைதளர் திறத்தி னாலும். (22)

வானுறு சுடர்கள் பாம்பால் வருந்துத லானு மிக்கோ
ரானநற் புலவர் தாரித் திரத்தினா லழுங்க லானும்
ஈனரா மறிவி லார்பா லிருநிதி சேர்த லானுந்
தானிரு வினையை யாருந் தள்ளுத லரிதே யென்று. (23)

இன்னநன் னீதி சொல்லி யிரணிய னிரங்கி நண்பன்
தன்னிரு காலிற் பூண்ட தளையுடன் சேனைக் காலில்
பின்னிய வலையுஞ் சின்ன பின்னமாக் கடித்து விட்டே
பன்னிய வுபசா ரங்கள் பகர்ந்துபின் னனுப்பிற் றம்மா. (24)

ஏகின புறாக்கண் மற்றவ் விரணியன் வளையிற் செல்லக்
காகமிங் கிவைக ளெல்லாங் கண்டெலி நண்பன் மேலே
மோகமாய் வளையின் வாயின் முகத்தைவைத் தழைத்த லோடும்
ஆருநீ யாரே யென்னை யழைத்தகா ரியமே தென்ன? (25)

யாவொருகாக மென்பேர் லகுபத னன்று னென்பார்
கானவ ரூலே னைந்த கபோதமன் னவன்பின் வந்தேன்
மானமுங் குணமு நட்பும் வரிசையு முறவுங் கண்டு
நானுமுன் னண்பு கொள்ள நாடியே யழைத்தே னென்ன. (26)

தின்னிரை நானுங் கொன்று தின்பவ னீயுங் கூடி
இந்நிலர் தன்னி னட்பா யிருந்திட லாபத் திற்கே
மன்னிய விடம தாகும் வருநரி நட்பு தன்னால்
முன்னமோர் வலையி லேமான் பட்டிடு முறைமை போன்றே. ()

தீங்கெனக் கெய்து மென்று செப்பலுஞ் சிறுமை யெய்தி
ஓங்குமான் வலையிற் பட்ட விதந்தனை யுரைத்தி யென்று
ஏங்கலில் காக மென்னு மிலகுபத னன்றன் கேட்கத்
தேங்கிய வுவகை யோடுஞ் சிரொலி யுரைக்கு மன்றே. (28)

## நரியால் மான் வலையிற் பட்ட கதை

வளமுறு மகத நாட்டிற் சண்பக வனத்தின் மன்னி
யுளமகிழ் கொடியு மானு முறவுகொண் டிருக்குங் காலக்
கொளுமிளம் புல்லான் மான்மெய் கொழுத்திடு மியல்பு நோக்கிக்
களமிகு நரியொன் றுள்ளக் கபடத்தாற் கொல்ல வெண்ணி. (29)

துன்னிய மான்பாற் சென்றென் னண்பநீ சுகமோ வென்ன
அன்னதைக் கேட்டு நீயா ரென்றலு மரியோ யானிக்
கொன்னுறு வனத்தில் வாழ்வேன் க்ஷுத்திர புத்தி யென்பேர்
பன்னிய கிளையொன் றில்லாப் பாவியாய்த் திரிந்து நின்றேன். ()

இன்றுனைக் கண்டு நெஞ்சத் தெய்தினே னுவகை யிப்போ
தொன்றிருப் பணிசெய் தன்பா லுற்றிட விழைந்தே னென்ன
நன்றெனை விசைந்தி ரண்டு நண்ணுசண் பகத்தின் கீழே
துன்றின வதன்மே லுற்ற சுபுத்தியாங் காகங் கண்டே. (31)

மித்திர மானே நின்பான் மேவினேன் யாவ னென்னப்
பத்தியிற் சினேகஞ் செய்யப் படர்ந்தசம் புகனென் றோத
அத்தகை யான்றன் செய்கை குலத்தொடு மாரா யாமல்
மத்தியத் திடநா மீகை தகாதது வழங்கல் செய்தால். (32)

கழுவுறு மொருபூ னைக்குச் சாற்கவ னென்று கூறுங்
கழுகிடங் கொடுத்தி றந்த கணக்குப்போன் முடியு மென்ன
வழுவிலக் கதையெ னக்கு மாபினிற் சொல்லு கென்று
பழுதறு மான்வி னவப் பகர்தருங் காக மன்றே. (33)

பூனைக்கு இடங் கொடுத்துக் கழுகு இறந்த கதை

திரைகெழு கங்கா தீரத் திரிகூட மலைப்பா லித்திப்
பருமரப் பொந்திற் கண்ணும் பைத்தகூர் நகமு மில்லா
ஒருகிழக் கழுகு மற்றைப் பறவைக ளுணவு நல்க
மருவுநாள் பார்ப்பை யுண்பான் மார்ச்சாலம் வந்த தாங்கே. (34)

அதைச்சிறு பார்ப்பெ லாங்கண் டஞ்சியே யிரைதல் கேட்டுப்
பதைப்புறு கழுகு நீரேன் பயமுறு கின்றீ ரென்ன
இதற்குளே பூனை யுய்வ தெண்ணியக் கழுகின் பாற்போய்
விதிர்ப்பொடு வணங்க நீயார் விளம்பெனப் பூனை கூறும். (35)

வேறு

எனதுபெயர் நெடுஞ்செவிய னெனக்கழுகு நீயிவண்விட்
டினதிடத்திற் கோடியிலையேற் சாவாயென் றுரைத்திடலும்
நினதிடத்தில் வருமென்றன் வாலாற்றை நீகேட்டுச்
சினவுகினு நன்றென்னச் செப்புமா லப்பூனை. (36)

பேதமாஞ் சாதியினாற் பிராணிகளைக் கொல்லுவதும்
நீதியா லுபசார நிகழ்த்துவது நன்றன்றால்
ஆதலா லவணவன்ற னுசாரந் தனைக்கண்டே
யாதுசெயத் தக்கதோ வதுசெய்த லியல்பென்ன. (37)

ஆக்கமிகுங் கழுகரச னதைக்கேட்டிப் பூனையினை
நோக்கியா ஞனீயிங் குற்றபடி நுவலென்னத்
தேக்குபுனற் கங்கைநதி தீரத்திற் றினந்தோறும்
ஆக்கையமிழ்ந் திடமூழ்கிச் சாந்திரா யணமாற்றி. (38)

ஈங்குற்றே னீமிகவுந் தருமவா னெனக்கேட்டே
இங்குற்றே னேனென்னில் வயதுமுதி ரியற்புலவர்
எங்குற்றா ரெனவினவி யெய்தியறங் கேட்டிடுதல்
பொங்குற்ற மரபென்று புகலுவரெந் நூலோரும். (39)

அறம்விடுத்திட் டெனைக்கொல்ல வகந்துணிந்தா யில்லறத்தின்
திறமடுத்தோர் நடைநின்போற் கண்டதிலைத் தெவ்வருந்தம்
புறமடுத்து வந்தவர்க்குப் புரிந்திடுவ ருபசாரம்
மறமடுத்து வெட்டுகின்ற வருக்குநிழல் செயுமரமே. (40)

அதிதியெவன் பாலெய்தி முகம்வாடு மோவவன்றன்
பதிதருபுண் ணியங்கொண்டு பாவத்தை யவற்கீவான்
மதிகொடிய சண்டாளன் மனைக்கண்ணுங் கதிரெறிப்பான்
புதியரெவர் வந்திடினும் பூசிப்பார் பெரியோரே. (41)

என்றிசைப்பக் கழுகதைக்கேட் டியம்புமிறைச் சிகளருந்திக்
கொன்றுழல்வ துமதுகுலக் குணமெனமுன் குறித்ததென
நின்றவன்மற் றதைக்கேட்ட நெடுஞ்செவியன் றரைதொட்டு
நன்றுசிவ சிவவென்று நற்கரத்தாற் செவிபொத்தி. (42)

தருமநூற் பலதெரிந்து சார்ந்துவை ராக்கியந்தீக்
கருமமெலா நீக்கினென்யான் கடுங்கொலையே பாதகத்திற்
பெரிதாகு மதுபுரியி னரகடைவர் பெருங்கானின்
மருவுபலா திகளுண்பார் மருவுவரோ பாவமென. (43)

கூடுங்கழுகு தெளியுமா றிவ்வாறு கட்டுரைத்து
நெடுஞ்செவிய னெனும்பூனை நிலைத்தன்னை மேற்றதன்பின்
மடம்படுபோர்ப் பிணையுண்டு வைகுதலும் பறவையெலாம்
ஒடுங்குபறழ் காணாமற் றேடலறிந் தோடியதே. (44)

புள்ளுகளைக் கழுகிருக்கும் பொந்தடைந்து பார்த்திடலும்
வெள்ளெலும்புஞ் சிறகுகளும் விழுந்துறக்கண் டிதுகொன்ற
தென்னவினம் பார்ப்பையெனக் கொன்றதா லனதயிதனால்
உள்ளகுணந் தெரியாம லிடங்கொடா ரொருவருக்கும். (45)

என்னலுமந் நரியதுகேட் டிவற்குநீ நட்புசெய்யும்
முன்னமே நின்னியல்பு தெரியுமோ மொழிதியெனப்
பின்னர்மான் காகத்தின் மனமொருமை பெறப்புரியத்
துன்னியவிம் மூன்றுமுறத் தொடர்புகொடு நின்றனவே. (46)

ஆயதினந் தனியொருநாண் மானைப்பார்த் தந்தநரி
மேயுமிளம் பயிருனக்கு வேண்டுமட்டு மருந்துமிடம்
நீயறிதி யெனக்காட்ட வன்றுமுத னெடியமான்
போயதனை மேய்ந்துபசி போக்கியிருந் திட்டதுவே. (47)

பயிரிட்டோ னிதுகண்டு வலைகட்டப் பாராது
செயிரிட்ட மான்வழக்கப் படிசென்று சிக்குண்டென்
னுயிரிட்ட நண்பனலா துயச்செய்வா ரியாரென்று
தயிரிட்ட மத்தென்னத் தனதுமனஞ் சுழல்காலை. (48)

வன்பினொடு நரிகண்டின் றெண்ணமெலாம் வாய்த்ததினித்
துன்பறவின் றிதனெலும்பைத் தசையினொடு சுவைத்துண்டே
இன்பினொடு முறலாமென் றெண்ணியவா றாதிருப்ப
அன்புறுமான் கண்டிங்கென் றனைவிடுவி யெனவிளம்ப. (49)

நரியதுகேட் டின்றைக்கோர் விரததின நாளையெனில்
பரிகரிப்ப னினதுதனைப் பகர்தருதோ லாதலினால்
பிரியமுறு நட்பினர்க்கென் பிராணனையும் விடவல்லேன்
தெரிகிலையோ நீயென்றோர் செடியின்மறைந் திருந்ததே. (50)

காகமது மித்திரனைக் காணாம லன்றிரவு
சோகமுற்றேங் கணுந்தேடித் தோல்வலையிற் பட்டதறிந்
தூகமுடை மானேயிங் குற்றுழல்வ தென்னெனலும்
நீகழறு முனைர்கேளா மையின்வந்த நிலையிதுவே. (51)

நண்புகொண்ட நரியெங்கே யெனவெனது நல்லிறைச்சி
உண்பதற்கோர் செடியின்கீ ழொளித்திருந்த தெனப்புகலப்
பண்புறுகா கங்கேட்டுப் பயிர்க்கதிப னுறுகின்றான்
மண்படுமா ருயிர்கழிந்த வடிவம்போ லுறுகெனலும். (52)

நண்ணியவப் பயிர்க்கதிப னுயிர்கழிந்த தௌவியென
எண்ணியிதை யிழுத்தங்கு வலைகட்டு மெல்லையினில்
மண்ணின்விரைந் தோடுதலுந் தண்டமவன் வலிந்தெறியத்
திண்ணியதோர் செடியின்கீ ழிருந்தநரி சிதைந்ததே. (53)

ஆதலாற் புண்ணியமும் பாவமுமிங் கதிகரித்தால்
ஈதல்செயுந் தம்பயனென் றிசைத்தெலியு மிவ்வாறு
சாதலகன் மானுக்குச் சம்புகன்ற னட்பினைப்போல்
ஓதரிய நின்னுறவு முபயோக மன்றெனவே. (54)

வேறு

அன்னது கேட்ட காக மகங்கரைந் துரைக்கு மையோ
என்னைநீ யுரைத்தா யென்ற னியல்பினைச் சிறிதுந் தேராய்
உன்னையான் கொன்று தின்றா லொருகணப் பசிதீ ராதே
மன்னிநட் பாயி ருக்கில் வாழலா மநேக காலம். (55)

சுத்திர கிரீவ னைப்போற் சேர்ந்தெனை நட்புக் கொண்டால்
எத்தனை நாளென் றாவி யிருக்குமுள் ளளவு முன்மேல்
வைத்தாண் பொழிவ தில்லை மற்றிது கபட மல்ல
சத்திய மென்று காகஞ் சாற்றியே மேலுங் கூறும். (56)

எறிதிரைப் பரவை நீரி லெரியுமோர் கொள்ளி புக்கால்
செறிபுனல் வற்றி டாது தீயவிந் திடுமவ் வாறே
அறிவுளா ரிடத்திற் கோப மடைந்திடா தடைந்த தேனும்
உறுதியா மனத்தி லேதா னெறுத்ததை யவிப்ப ரென்றே. (57)

உரைசெய்கா கத்தை நோக்கி யுன்னது புத்தி யென்றுந்
திரமிலை யுன்னைச் சேர்க்கிற் செய்கரு மங்க ளாகா
புரைபடு மெனவே யென்றன் புத்தியுன் புத்தி யூடே
வரையறக் கலந்தே யெந்த வகையினட் பாவே னென்று. (58)

கடலின்மே லோடுங் கப்பல் கரையின்மே லோட்ட லாகா
புடவிமே லோடுந் தேரைப் புணரிமே லோட்ட லாகா
திடமுடன் கூடா தென்றுஞ் சேர்வது மில்லை சேர்ந்தால்
கெடுவதே யுறுதி யல்லாற் கேண்மையா தொன்று மில்லை. (59)

நாரியர் விருத்தர் சீலர் நியாயமுந் துட்டர் செய்யுங்
காரிய நலமு மெய்யாக் கருதியே நட்பு கொண்டே
பேருல கத்தி லின்பம் பெற்றவ ரில்லை துன்பம்
சேருவர் மடியிற் பாம்பைச் சேர்ப்பவர் போல வென்ன. (60)

உள்ளது தானே துட்ட ருறவொருக் காலு மாகா
தெள்ளியோ யீதோர் காக்கை யொன்றுஞ் செப்பி டாதே
வள்ளலே நினக்கு நான்றான் மன்னுநட் பாவே னீதான்
தள்ளினு லுயிரி ழப்பேன் சத்திய மென்று கூறி. (61)

மாந்தருக் கெல்லா நட்பு வருந்திர வியத்தி னாலே
போந்திடு பறவைக் கெல்லாம் புசித்திடு நிமித்தத் தாலே
சாய்ந்திடு மூட்டர்க் கெல்லாங் கண்டிதப் புத்தி யாலே
சேர்ந்திடு பெரியோர்க் கெல்லாந் தெரிசனத் தாலே யெய்தும். ()

நல்லவர் கண்ட போதே நட்பின ராவர் பொல்லாப்
புல்லியர் தண்டத் தாலே பொருந்திநட் பாயி ருப்பர்
மெல்லிய லூசி காந்த மேவிடுந் தண்ட மான
யல்லிரும் பெரியில் வெந்து வருந்தியே யொட்டு மன்றே. (63)

நின்னுடை யறிவு நெஞ்சி னேயமு முபாய முங்கண்
டுன்னுடை நட்பு வேண்டி யுற்றுன தருகே வந்தேன்
என்னுடை யறிவு நெஞ்சி லிரக்கமுஞ் சகாய முந்நீ
முன்னியிங் கறிதி யென்று வாயச வேந்தன் கூற. (64)

நன்றெனு விரணி யன்று னகைமுக மாகி நட்பால்
என்றுநா மிடைவி டாம லிருப்பமென் றனுப்பக் காகம்
வென்றிகொள் புலியி ரத்தம் வீந்தமா னிறைச்சி தானும்
தின்றெலி தனக்கோர் பங்கு தினந்தின மளித்து வாழ்ந்து. (65)

அந்தநா டம்மு னோர்நா ளட்வியி லிரைக ளில்லை
முந்தவே யெனக்கு நட்பாய் முயங்கிடு மாமை யின்பேர்
மந்தா னவன்பாற் செல்லின் வாவியின் மீன்க ளெல்லாம்
தந்திடு நாமுந் தின்று தருக்கியங் கிருக்க லாமே. (66)

என்னவே யெலியு நெஞ்சி லெனக்கொரு கரும முண்டாங்
கன்னது தீனநின் னோடே யாங்குவந் துரைப்பே னென்னத்
தன்னிரு காலாற் கொண்டு தானும்வா னெறியாற் செல்ல
முன்னிய வாமை கண்டு வந்தெதிர் கொண்டி ருந்தே. (67)

இற்றைநாள் வரையு நன்று யிருந்தையோ நண்ப வென்றே
உற்றநற் கருமம் பேசி யுபசரித் திருக்கும் போழ்தில்
மற்றெலி யாதென் றுமை வினவயாம் வருந்தி முன்செய்
நற்றவப் பயனால் வந்த நலந்தரு நண்பன் காணே. (68)

இங்கிவன் பெருமை சொல்லில் யாவரால் முடியுஞ் சேடன்
தங்குமா யிரநா வாலுஞ் சாற்றினு முடியா தென்று
துங்கமாங் கபோத ராசன் றொடர்வலைப் பட்ட வாறும்
அங்கதை விடுத்த வாறு மடைவுடன் சொல்லிற் றம்மா. (69)

சொல்லலுங் கமட வேந்தன் றோழனிங் கிவனே யென்று
நல்லுப சாரஞ் சொல்லி நண்புகொண் டிருகை யாரப்
புல்லிமோந் தருகி ருத்திப் பொருந்திய விருந்து மிட்டே
எல்லையிற் களிப்பி னோடு மிருந்திர ணியனை நோக்கி. (70)

### எலி தன் வரலாறு சொல்லிய கதை

உன்னிட மேது நீயிங் குறைசரித் திரந்தா னேது
நின்னிடம் விட்டு மிங்கே நேர்ந்தகா ரணமே தென்ன
என்னிட நகரஞ் சம்ப காவதி யென்ப தீது
தன்னிலோர் தவசி மேவுந் தனிமட மொன்றுண் டென்றும். (71)

பெருவளைக் குள்ளி ருப்பேன் பிஞ்ஞகன் சன்னி யாசி
தெருவெலாம் பிச்சை தேர்ந்து சிறிதுதான் புசித்து மீதி
ஒருசிறு பாத்தி ரத்துட் பெய்துவே றொன்றான் மூடி
வருபர தேசிக் கென்று வைத்தவ னுறங்கும் போதில். (72)

வந்துநா னந்தச் சோற்றில் வயிறுகொண் டதைய ருந்தி
அந்தமா யோகி கையி லகப்படா தொளித்துக் கொள்வேன்
இந்தவா றனேக கால மிருக்குநாள் களிலே யோர்நாள்
புந்திகூர் ஞானி தன்பாற் பொருந்தின னொருசன் னியாசி. (73)

பொருந்திய வவனுந் தானும் பொருவில்சாத் திரங்கள் பேசி
இருந்தன ரனேக நேரம் யானும்வெம் பசியி னாலே
வருந்தியென் வளையை விட்டு வந்துபாத் திரத்திற் சோற்றை
அருந்திய சத்தங் கேட்டே யதட்டியே துரத்தி விட்டான். (74)

துரத்திய சூடா கன்னன் றோழனங் கவனை நோக்கி
விரத்தனோ யிருந்து ஞானம் வினவிய வுனக்கிப் போது
கருத்துவே றுற்ற தென்ன காரண மென்று கேட்க
தெரித்திடு முனது சொல்யா னதுதாஞ் செய்ய கில்லேன். (75)

எலிக்கிந்தக் குதிப்பைக் கண்டே யென்மனம் வேறா யிற்றுப்
பலிக்குநா னுழன்றெ டுத்த * பாத்தெலாந் தின்று கொண்டே
செலிப்புட னுளதிங் கையா கிட்டினும் பிடிக்கக் கூடா
தெலிக்குளிப் படிநான் கண்ட தில்லையென் றிரங்கிச் சொன்னான்.

அன்னவன் றன்னை நோக்கி யதிதியவ் வெலியொன் றேயோ
பின்னையு முண்டோ வென்னப் பேரெலி யொன்றே யென்றான்
மன்னுகா ரணம்வே றுண்டு மறையவன் றேவிக் கன்னான்
சொன்னகா ரணம்போ லென்று சொல்லவக் கதையே தென்ன.

## தீதி செய்த கதை

முன்னமோர் நகரந் தன்னின் முழுமறை யுபாத்தி யாயன்
தன்னுடை மனையா ளான சவுண்டலி தன்னை நோக்கித்
தென்னமர் பருவந் தன்னிற் றிதிசெய வேண்டு மென்ன
அன்னவள் செலவுக் கில்லை யரிசியு மில்லை யென்றாள். (78)

என்றலு முபாத்தி யாய னிருந்தது கொண்டு செய்தல்
நன்றது வைத்து வேறே நாடினால் வேட னோரி
பொன்றினாற் போலப் பொன்றும் பொருளையு மிழப்ப மென்ன
வென்றிகொள் வேட னோரி விளிந்தவா றவள்யா தென்ன. (79)

---

* பாத்து=சோறு.

வேடுவ னொருவன் காட்டில் வேட்டைகள் கிடையா மற்போய்
ஓடியே யனேக நாளாய் வனத்திலே திரிய வோர்நாள்
ஓடிய மானின் பின்னே யுலைந்ததை யெய்து கொண்டு
நாடினன் சேரி யாங்கோர் நற்பெரும் பன்றி கண்டான். (80)

இத்தைநா மெய்தோ மாகி லிரண்டுநாட் டினி யுண்டென்
றத்தையு மெய்தான் பன்றி யவனையுங் கொன்று சாத
லுற்றது நரியுங் கண்டு மூன்றுநா ளிரையுண் டென்று
கொத்துவி ஞாண்க டிப்பக் குத்திடச் செத்த தென்றான். (81)

உள்ளது கொண்டு தன்ம முதவிநாம் புசிப்போ மென்று
தெள்ளிய மறையோன் சொல்லத் தேவியு மகிழ்ந்து வீட்டில்
எள்ளலா தொன்று மில்லை யிதையினிக் கழுவி யாட்டி
வள்ளலார் மறையோர்க் கெண்ணெய் வழங்கிநீ ராட்ட வென்றே.

திலத்தையாய்ந் தெடுத்து நீரிற் செப்பமாக் கழுவிப் பாயில்
உலர்த்திள ளுலர்த்த வந்த வூரினிற் காகந் தின்று
நிலத்தினி லிறைப்பக் கண்டு நெஞ்சகங் கலங்கி யோடிப்
புலத்திய னென்னும் வேத பூரணன் மனையிற் சென்றே. (83)

அங்கவன் றேவி தன்னை யழைத்துநான் பருப்ப தீவேன்
மங்கையே யெள்ளுத் தந்து மாற்றெனு மாற்றங் கேட்டே
இங்கொரு காரணத்தா லெள்ளுக்கு மாற்ற வந்தாள்
நங்கையே யன்றெவ் வேந்த ளுடியே விசாரித் தானே. (84)

ஆரண னறிந்து கொண்டா னப்படி நாமு மிந்தக்
காரண மறிவோ மென்று கடுகியே கொட்டெ டுத்துப்
பாரினை யகழ்ந்து வெட்டிப் பார்க்கநா னோடிப் போனேன்
சேரவங் கிருந்த செம்பொற் றிரளெலா மெடுத்துக் கொண்டார்.

வேறொரு வூரையில் லுலவி வெம்பசி தனக்கு முன்போல்
சோறுநா னருந்தப் போனேன் றூரத்திலவந் தடித்தா னின்று
காறுமங் கவர்ழுடத்தைக் கருதவும் பயந்து திங்கள்
ஆறுமோ ராறும் வேறோ ரடவிபுக் கிருந்தேன் யானே. (86)

திரவியந் தானே புத்தி திரவியந் தானே வித்தை
திரவியந் தானே சுத்தந் திரவியந் தானே சித்தி
திரவியந் தானே சத்தி திரவியந் தானே முத்தி
திரவியந் தானே யாதுஞ் செய்வதல் லாது முண்டோ. (87)

சத்துவம் புத்தி வித்தை சதுர்விதார்த் தங்க ளான
இத்தனை விதமுஞ் செல்வ மில்லையே லில்லை யாருஞ்
சத்துவம் புத்தி வித்தை சதுர்விதார்த் தங்க ளான
இத்தனை விதமுஞ் செல்வ மெய்திடி லெய்து மன்றே. (88)

சுதியிலார் பாட்டுந் தங்கள் சுற்றமில் லாத நாடும்
மதியிலார் கவியு நல்ல மனைவியில் லாத வீடும்
பதியிலா ரழகும் பாழே பார்க்கிலிங் கிவைபோ லல்ல
நிதியிலார்க் கெவையும் பாழே நினைக்கின்மூ வுலகி னுள்ளும். (89)

கதிரவ னிலையேற் கண்ணிற் காண்புன மறையு மாபோல்
நிதியமொன் றிலையேல் யார்க்கு நீதிமா ஞானம் போதம்
துதிபெறு கீர்த்தி யாண்மை சூழ்ச்சிமந் திரவி சாரம்
சதுரபி மான மெல்லாந் தன்னிலே மறைந்து போமால். (90)

வறுமையா லேயா சிக்க வருமவர் தமக்கு மாவி
இறுமவர் தமக்குஞ் செய்யு மியற்கையொன் றுமே தன்னில்
உறுதிபோங் கைகால் சோரு முள்ளமுங் கலங்கு மெய்யும்
குறுகியே நடுங்கும் வாயுங் குழறுநல் லறிவும் போமே. (91)

பொன்னின்மே லிருந்து சோற்றைப் புசித்தனை பொன்னும் போ
இன்னமு முனக்கு வெட்க மில்லையோ வென்று குடா [ச்சே
கன்னன்முன் சொன்ன தென்றன் கருத்துளே வருத்த வாலே
நின்னைவந் தடைந்தே னென்னை நீயினிக் காப்பா யென்ன. (92)

இரணியன் றன்னை நோக்கி யிலகுபத னன்க ணீயும்
திர்முடன் வந்து சேர்ந்த செல்வமுற் பிறப்பி லெய்ர்ன்
பரவிய தெய்வந் தந்த பாக்கிய மன்றோ வென்று
புரைவற நண்பு கொண்டு பொருந்தியங் கிருந்து கொண்டே. (93)

மந்தரன் மீன்கள் கொண்டு வரலகு பதனன் போகி
எந்தடை வேனு நல்ல விறைச்சிகள் கொண்டு செல்வச்
சுந்தர விரணி யன்போய்ச் சோறுகொண் டேக மூன்றும்
சந்ததங் கூடி யுண்டு தருக்கியங் கிருக்கு நாளில். (94)

## வேறு

கான வேடனைக் கண்டு நடுங்கிய
மானி ரோர்கலை மானவ ணெய்தலும்
ஞானந் தானுமி வரநண்ப னேயுளம்
ஏன டுங்கினை யென்று வினவவே. (95)

வெஞ்ச மன்புரை வேட னொருவனே
நஞ்ச லம்புகொண் டெய்ய நடுங்கியே
தஞ்சமிங் கின்மையா லுமைச் சார்ந்தனன்
அஞ்ச லென்றப யந்தரு வீரென. (96)

நல்ல துன்பெயர் யாது நவிலென
எல்லை மன்சித்தி ராங்கனெ னச்சொல்வார்
சொல்லுந் தந்தைதாய் சுற்றமொன் றின்மையால்
புல்லு கானம் புகுந்து வருந்தினேன். (97)

தந்தை தாய்தமர் நீவிர்நுந் தஞ்சமாய்
வந்த மென்மிசை நண்புவைத் தீரெனில்
எந்த நாளு முமைப்பிரி யேனென
மந்த ரன்முதன் மூன்றும் வருக்குமால். (98)

நன்று நாமினி நால்வருங் கூடியே
ஒன்று சிந்தைய ராகியொ ருமையாய்
என்றும் வாழ்வ தியல்பென வெண்ணியே
அன்று மூன்று மபய மளித்தவே. (99)

நான்கு மிப்படி நல்லுற வாகியே
ஆங்கு வைகு மளவினி லோர்பொழு
தோங்கு மாறிரைக் கோடியோர் காட்டினில்
தேங்கு வேடன் வலையினிற் சிக்கியே. (100)

சித்தி ராங்கன் றிகைத்தது கண்டுதான்
கத்து காகத்தின் பாடடைதங் காதுற
மெத்து மாமையு மூடிக மும்விரைந்
தத்தி சைக்கண டைந்ததைக் கண்டவே. (101)

காக்கை சென்றெதிர் கூவிக் கதறியே
நீக்கண் வேடன் வலையினிற் சிக்கியே
நோக்கு நவ்வி நுடங்கும் வருத்தத்தை
நீக்க வேண்டு நிமிடத்தி லென்னவே. (102)

கூடி மூன்றுங் குறுகி வலைக்குளே
வாடி நின்ற மறிமுக நோக்கியே
பீடு லாவு மறிவிற் பெரியைநீ
ஓடி யிவ்வலை யுற்றதென் னோவென. (103)

பின்னை வேண்டின பேசுதும் வேடன்வந்
தென்னை யாவி யிறுத்திடு முன்னமே
மன்னு காலில் வலையை விடுத்திடென்
றன்னு ரூடிகத் தோடுரை செய்யவே. (104)

என்ன பீதியு னக்கென் றெலிசொல
முன்னை நான்குரு ளைப்பரு வத்திலே
அன்னை யோடு மடவியில் வைகினேன்
துன்னு வேடன் பெருவலை சூழ்ந்தனன். (105)

தாவி யந்த வலைதனைத் தாண்டியோர்
காலில் வீழ்ந்தனன் கண்டு கடுங்கொலைப்
பாவி யென்னைப் பிடித்துப்போய்ப் பட்டணக்
காவ லன்மகிழ் காணிக்கை யீந்தனன். (106)

அந்த மன்னன் குமாரர்க் களித்தலும்
மைந்தர் சிந்தை மகிழ்ந்து களிப்பினால்
சந்த தம்விளை யாடித் தருக்கியே
பந்த மிட்டுவைத் தாரப் பகலிலே. (107)

மழைமு ழக்கி வருதலு நாமுநம்
உழையி னத்துட னோடித்தி ரிந்துபைங்
குழைமு றிப்பதெந் நாளெனக் கூறிநின்
றழுத ரற்றின னன்னது கேட்டலும். (108)

என்ன காரண மோவறி யோமிது
துன்னை நான்தடை செய்வது தன்மமன்
றென்ன வெண்ணி யெனைவிடுத் தாரினை
மன்னர் நானிவ் வனத்தினி லுற்றனன். (109)

என்று கூறி யிரங்க விரணியன்
வென்றி வேடன் விரைந்து வருமுனம்
சென்று காலில் வலையைச் சிதைத்தலும்
கன்று மானுங் கடுகி நடந்ததே. (110)

தீமை வேடன் விரைந்துசென் றுவெளி
பூமி வாய்வளை புக்கங் கொளித்தது
வாம மேவு கொடிமரத் தேறவே
யாமை தானடை யான்முட்ட தானதே. (111)

வந்த வேடன் மனது மயங்கியே
அந்த மானி னடிதொடுத் தோடலும்
முந்து மாமை முடங்கிக் கிடந்ததைப்
பந்த மார்வலைப் பையினிற் கட்டியே. (112)

மானின் மேன்மனம் வைத்து மயங்கியே
ஆன வேடுவ னாமைகொண் டோடவே
ஞான மார்கொடி யைக்கண்டு நண்பனைக்
கான நீங்குமுன் மீட்கக் கருதியே. (113)

ஆகு வேந்தனம் மாமையைக் கொண்டவன்
போக நாங்கண் டிருத்தல்பொல் லாதுமுன்
ஏகி மானொடு கூடியி தற்குவே
றாக மெண்ணுவம் வாவென் றுரைத்ததே. (114)

என்று ரைத்தலுங் கேட்டிகல் வேடனை
வென்று நண்பனி டர்விலக் காமலே
சென்று நாமுயிர் வாழ்வது தீதென
ஒன்று நண்பிற் கொடியு முரைத்ததே. (115)

கோல மாரொலி நன்றெனக் கூறலும்
காலி ஞலங்கி டெக்கிக்க ணத்தினில்
சால வேபறந் தக்கலை தன்னுடன்
ஓல வேயொரு நன்மை யுரைசெயும். (116)

நத்து நீர்க்கரை தன்னில் விழுந்துநீ
செத்த தென்னக் கிடந்திடு சேர்ந்துனைக்
கொத்து வேனது கொண்டவ னாமையை
வைத்து நின்னை யெடுக்க வருவனே. (117)

அந்த வேளை யிரணிய னாமையின்
பந்த நீக்கி வளைபுகும் பைம்புனல்
மந்த ரன்புகு நான்பறப் பேனவன்
முந்த நீயு மொளித்திடு வாயென. (118)

நல்ல சூழ்ச்சிசொன் னாயென நண்ணியே
மெல்ல நீர்க்கரை மான்கலை வீழ்ந்தது
புல்லி காகம்பு சிக்கவி ழுந்தபோல்
மெல்ல வேயதன் மீதில்வி ழுந்ததே. (119)

கண்டு வேடன் கலக்கந் தெளிந்திதைக்
கொண்டு போதுமெ னக்குலத் தாமையை
மண்டு நீர்க்கரை தன்னில்வைத் தோடினான்
பண்டு போலெலி பாசங் கடிக்கவே. (120)

மானை வேடன் குறுகவும் மானொரு
கானில் வீழ்ந்தது காகம்ப றந்தது
கூன லாமை குளத்தினில் வீழ்ந்தது
ஞான மூஷிக கல்வளை புக்கதே. (121)

வேட ஞொடிவி டாய்த்தவன் மீளவே
கோடு லாவிய வாயசங் கூறவே
நாடி நான்குமங் கோரிட நண்ணியே
கூடி வாழ்ந்து குலாவியி ருந்தவே. (122)

ஆத லானல் லவர்க ளுறவுபோல்
ஊதி யம்பிறி தில்லையு யிர்க்கென
வேதி யன்சொல வேந்தன்கு மாரரும்
நீதி யாமென நேயம்வைத் தார்களே. (123)

## இரண்டாவது தந்திரம்

## சுகிர்ல்லாபம்

முற்றிற்று.

---

## மூன்றாவது தந்திரம்

## சந்திவிக்கிரகம்

(பகைவரை அடுத்து உறவு செய்து வெல்லுதல்)

**[Forming friendship with enemies and ruining them]**

இளம்பிறை யாடக் கங்கை யிருநதி யாட மன்றில்
வளம்பெற நடிக்கு மெந்தை மலரடி கருதி மேலோர்
உளம்புனை மித்ர பேத வுபாயநற் சுகிர்ல்லா பம்யாம்
விளம்பின மிப்பாற் சந்தி விக்கிர கஞ்சொல் வோமே. (1)

அந்தணன் சுகிர்ல்லா பத்தி னடைவெலா முரைப்ப வேந்தன்
மைந்தர்கள் வினவி மிக்க மகிழ்வுட னிருந்து மூன்றாந்
தந்திர மென்று சொன்ன சந்திவிக் கிரகம் யாது
புந்திகூர்ந் துரைக்க வென்று புகலவே தியனு ரைப்பான். (2)

சத்துரு வான பேர்கள் சரணமென் றடைந்தா ரேனும்
மித்திர ராக வெண்ணி விரும்பிநட் பாக வொண்ணா
தெத்திற மென்னிற் காக மிளைத்தது போல வந்து
குத்திர மாகக் கோட்டான் குலமெலா மழித்த தன்றே. (3)

### காக்கை கோட்டானை வென்ற கதை.

என்னவக் கதையே தென்றா ரிருள்குடி கொண்ட காட்டான்
றன்னதிற் பெரிய தான வாலமா மரத்தி லென்றும்
துன்னிய காக வேந்தன் றுகளறு மேக வண்ணன்
அன்னவன் சேனை கோடி யமைச்சரோ ரைவ ராவார். (4)

திகழுமத் தீபி தன்சந் தீபிதன் றேச மெல்லா
புகழ்புரோத் தீபி தன்பின் புகலுமாத் தீபி தன்மேல்
நிகழ்சிரஞ் சீவி யென்பார் நீதிமந் திரிகள் சூழ
மகபதி போல மேக வண்ணன்வீற் றிருக்கு நாளில். (5)

அடுக்கவோர் மலைமு ழைக்கு ளலகிலாக் கூகை தாழ
நடுக்கமொன் றானு மின்றி நல்லமந் திரிகள் சூழ
இடுக்கணில் லாம லெங்கு மிரவெலாம் வேட்டை யாடத்
தடுக்கலா வுலூக மன்னன் றானுமங் கிருந்து வாழும். (6)

பகலெலாங் காகங் கூகை பதைத்திட வதைக்குங் கூகை
இகலிரா முழுதுங் காக மெழும்பிடா தடிக்கு மிந்த
வகையிலே கிடந்து சிந்தை வருந்துநா டன்னி லோர்நாள்
தகவிரா வதனில் யாமந் தனினமைச் சர்களை நோக்கி. (7)

கதிரவ னெழுந்தா லந்தக் காக்கையை வெல்லக் கூடா
திதுநல சமய மிந்த விரவிலே வளைந்து கொண்டு
சதியினா லடித்தி ழுத்துச் சத்துரு நாசஞ் செய்வோம்
மதியுடன் சேனை கூடி வருகவென் றெழுந்த தம்மா. (8)

நன்றென மகிழ்ந்த மைச்சர் நமக்கிது வேளை தானே
வென்றிநாம் பெறுவோ மென்று விரைவுடன் படைகள் கூட்டிச்
சென்றுபே ராலைச் சூழ்ந்து சினத்துட னடித்துக் கொத்திக்
கொன்றுதான் வெற்றி கொண்டு கூகைவேந் தடைந்த தன்றே. (

அழிந்தன காக சேனை யாவெலாக் குருதி வெள்ளம்
வழிந்தது சிறகுங் காலும் வயிற்றினிற் குடரு மற்று
விழுந்துபின் மற்ற தற்குள் வேந்தனும் விழுந்தொ ளித்தான்
இழிந்தது கங்குற் போழ்து மெதிர்ந்தது பரிது மன்னே (10)

இருள்மிடி வளவின் மன்ன னெழுந்துதன் படைகள் பட்டுக்
கருமலை போற்கு வித்த கணமெலாம் பார்க்க வங்கே
பெரியமந் திரிக ளைந்தும் பிழைத்தன சிலகா கங்கள்
தருவொடு மினத்தை நீத்துத் தப்பியே பிழைத்த வாங்கே (11)

பிழைத்தகா கங்க ளோடு பெரியமந் திரிக டம்மை
அழைத்துநங் காக மெல்லா மழிந்திட வென்ன வேதன்
இழைத்தநா ளிதுவோ வென்றங் கிரங்கியே யழுது காயத்
துழைத்தகா கத்துக் கெல்லா முற்றகா யங்கள் கட்டி. (12)

செத்தகா கங்கட் கெல்லாஞ் செய்யுமா றுரிமை செய்து
தத்துநீ ராடி வேறோர் தருவினி லிருந்து வேந்தன்
துய்த்தலுந் துறந்து மிக்க சூழ்ச்சிமந் திரிகா ளென்னை
புத்திரா முய்யு மாறு புகலுமி னென்று கூற. (13)

சத்துரு வினுயிக் காரைச் சார்ந்துசத் துருவை வெல்லல்
அத்திரங் கூடா தென்னி லவரையே தொழுது நிற்றல்
சித்தமங் கிரங்கா ராகிற் றேசம்விட் டப்பாற் போதல்
இத்திற முபாய மூன்றே யென்றுதீ பிதனை விண்டான். (14)

தன்னிடத் திருக்கு நாய்க்குஞ் சௌரிய முண்டு சிங்க
மென்னினுந் தானம் விட்டா லெவருமங் கதையெண் ணார்கள்
துன்னுபாற் பசுவுந் தன்பால் சுரந்திடா திடம்பே தித்தால்
மன்னிடத் திருந்தே வெல்லும் வகைநினைத் திடுத லன்றே. (15)

என்றுசந் தீபி தன்று னியம்பலு மதும றுத்து
நின்றுநற் குணமே தென்று நிகழ்புரோத் தீபி தன்முன்
வென்றிகொண் டவர்க ணம்மை மேவியிங் கிருக்க வொட்டார்
இன்றினிச் சமாதா னத்தா லிருப்பதே நல்ல தென்றான். (16)

வெங்கதிர்ப் பகலிற் கண்கள் விளங்குதல் குடிஞைக் கில்லை
கங்குலின் பொழுது கண்கள் கருங்கொடிக் குலத்துக் கில்லை
எங்கினிச் சமாதா னத்தா லிருப்பது கூகை கூட்டம்
மங்கவிப் பகலே சென்று வளைந்துகொண் டடிப்போ மென்று. ()

ஓதவாத் தீபி தன்மற் றுரைத்தமந் திரிக ளைவர்
போதனை பலவுங் கேட்டுப் புத்தியு முபாய முஞ்சொன்
னீதியும் விறலு மென்று நிகழ்சிரஞ் சீவி தன்னை
ஓதுநீ யென்று மன்ன னுரைத்திட வுரைக்கு மன்றே. (18)

வித்தொடு மந்தி ரஞ்சேர் விசாரமு நிகரே யந்த
வித்தினை விதைத்தா லன்றி விளைபயன் கொடாதவ் வாறு
புத்திமந் திரிகள் சொல்லும் போதனை தனையு நெஞ்சில்
வைத்திருந் தாலே யன்றி மன்னர்தங் கருமம் வாயா. (19)

கூடுவ தொன்று கூடிக் குறைவறக் கெடுப்ப தொன்று
நாடுவிட் டேக லொன்று நல்லரண் சேர்த லொன்று
வீடுவிட் டேகா தொன்று மித்திர பேத மொன்று
நீடுசொல் வேந்தர் தம்பா னிகழ்குண மிருமூன் றாகும். (20)

காரிய முயற்சி பண்ணல் காலமு மிடமு மோர்தல்
சீரிய தனமு மாளுந் தேடுதெ லொருவன் செய்த
காரிய மதனுக் கொத்த காரியந் தானுஞ் செய்தல்
பாரிலே சமாதா னங்கள் பண்ணலேந் தாகு மங்கம். (21)

சாமமும் பேதந் தானுந் தானமுந் தண்டந் தானும்
ஆமுபா யங்க ளென்கா மறியுமுற் சாக மந்த்ரம்
பூமியிற்ப்ர புத்வ மென்று புகன்றிடு சத்தி மூன்றே
சாமியிங் கிவைக ளெல்லாந் தானறிந் தவனே வேந்தன். (22)

ஈவிரு குணமு மங்க மொழிந்திடு மைந்து நெஞ்சில்
மேவிய வுபாய நான்கு மிக்கசத் திகளோர் மூன்றும்
ஓவற விசாரித் தேற்ற வுசிதமா னவைக ளெல்லாம்
காவலர் கருத்தி லெண்ணிக் கருமமங் கியற்று வானே. (23)

பெலத்தவர் தம்மைச் சேரார் பேசிய சமாதா னத்தால்
நலத்தக விருப்ப தில்லை நாமினிப் பொரவு மாட்டோம்
சலத்தர்சே வகமு மாகாச் சந்ததஞ் சிந்தை நீங்காக்
குலப்பகை நமக்கு மந்தக் கூகைக்கு மென்று கூற. (24)

என்னகா ரணத்தி னாலே யிருவரும் பகைத்த தென்ன
மன்னவா காக்கை யார்தம் வாக்குத்தோ ஷத்தி னாலே
பன்னுநங் குலங்க ளந்தப் பகையினாற் பட்ட பாடு
துன்னிய கழுதை வாக்குத் தோஷத்தாற் பட்ட வாறே. (25)

### வாய்க் குற்றத்தாற் கழுதை கெட்ட கதை

எணச்சிரஞ் சீவி கூற யாதந்தக் கதைசொல் லென்ன
மனக்கப டான வண்ணான் வளர்த்ததோர் கழுதை மேலே
கனப்பொதி யேற்றி வாவிக் கரையிலே தள்ளிப் பாசந்
தனைக்கொடு கட்டிப் போட்டுத் தப்புவன் பகலி னெல்லாம். (26)

கங்குலிற் புலித்தோ லாலே கழுதையை மறையப் போர்த்தே
அங்கொரு பயிர்ப்பு லத்தி லனுதினம் விடுவன் மேய
தங்கிய செந்நெற் காப்பார் தனிப்புலி யெனப்ப யந்தே
அங்கொளித் தோடிப் போவா ரதுவுமெய்ந் தோடிப் போமே. ()

புலிமிகப் பசித்த தேனும் புற்களைத் தின்னா தென்பார்
கலியினிற் புதுமை தானோ கபடமோ வென்ன வெண்ணி
வலியவ னொருவன் கையில் வல்லையந் தனைக்கைக் கொண்டு
பொலிகரு கம்ப ளத்தாற் பொதிந்துகொண் டொளித்தி ருந்தே.

விரைவொடு கழுதை வந்த வேளையி லெழுந்தி ருக்கக்
காமது கண்டு பெட்டைக் கழுதையென் றெண்ணிக் கொண்டு
குரன்முழக் கிடவே சத்தங் குறித்திவர் கழுதை யாரோ
வாவா வென்று சொல்லி வாட்டின னீட்டி யாலே. (29)

கழுதைதன் வாக்கி னாலே கடுங்கொலை யுற்ற தீதோ
முழுவதும் பறவை கூடி முன்னமோர் கூகை தன்னைப்
பழுதறு மாச னாகப் பட்டமே கட்டி வைத்துத்
தொழுதினி வாழ்வோ மென்று சூழ்ந்துவந் திருக்கும் போது. ()

பலபல சாதி யான பறவைக ளனைத்துங் கூடி
நலமது தானே யென்ன நனிமுது காக மொன்று
குலமிது நல்ல தல்ல குணங்களுந் தீக்கு ணங்கள்
நிலமிசைக் கோட்டா னென்று நிசிசர மெனுஞ்சொற் சொல்லும்.

பகற்கெலாங் குருட்டுக் கண்கள் பார்வைக்கும் பிடிப டாவாம்
முகத்திலே யழகு மில்லை மொழியினு மதுர மில்லை
அகத்தினல் லறிவு மில்லை யாருமிங் கிதையெண் ணார்கள்
சகத்திலே யிதன்பேர் சொன்னாற் சத்துரு மிகுதி யாமே. (32)

பெரியவன் பேரைச் சொன்னாற் பெரும்பகை தனையும் வென்றே
உரியதன் னினமுந் தானு முய்யலா மதற்குச் சாக்ஷி
அரியசந் திரன்பேர் சொல்லி யானையின் படையை வென்றே
ஒருமுய லினங்க ளோடே யுகந்துவாழ்ந் திருந்த தென்றே. (33)

## முயல் யானையை வென்ற கதை

துன்னரு மடவி தன்னிற் றும்பிக ளனேகஞ் சூழப்
பன்னருஞ் சதுர தந்த னெனுமிறை பண்பின் வாழ்நாள்
அன்னநாண் மழையில் லாம லருஞ்சுனை யெல்லாம் வற்ற
உன்னுநீ ரெங்குண் டென்ன வொற்றர்பார்த் தோடி வந்தே. (34)

சந்திர சரசு தண்ணீர் ததும்பிட நிற்கு தென்ன
அந்தநற் சுனையை நாடி யானைக ளனைத்துஞ் செல்ல
முந்தியச் சுனையைச் சூழு முயற்சிலீ முகவேந் தஞ்சி
மந்திரி விசயன் றன்னை வரவழைத் துரைக்கு மன்றே. (35)

இற்றைநாள் வரையி லுறு மினமுமிச் சுனையைத் தானே
சுற்றியிங் கிருந்தோ மிந்தத் தும்பிகள் வந்து புக்கால்
மற்றுநா மிருக்க லாகா வனத்தில்வே றிடமு மில்லை
உற்றிவ ணிருக்க வேறோ ருபாயநீ நினைப்பா யென்ன. (36)

ஆனையை வெல்லு மாறிங் கருமையோ விடைதா வென்று
ஞானமந் திரவி சார னனிபெறு விசயன் கூறிச்
சேனைகா வலனை மந்தச் சிலீமுக னனுப்ப வேகிக்
கானில்வே ழக்கூட் டத்தைக் கண்களாற் கண்டு நின்றே. (37)

நகைத்துடன் கொல்வர் துட்டர் நாமவர் நடுவிற் பட்டால்
வகைப்பட வோர்பா னின்றால் வந்தடித் திடுவர் மாறாய்
மிகைப்பட வவர்கள் கையில் வீறுட னுமுஞ் சும்மா
அகப்படி னம்மை யந்த வானைதான் கொல்லு மன்றே. (38)

என்றுநன் மனத்தி லெண்ணி யிதன்கையி லகப்ப டாமல்
நின்றுநாம் வெல்வோ மென்று நினைத்தொரு குவட்டி லேறித்
துன்றிய களிற்று வேந்தைத் தும்பிநீ சுகமோ வென்ன
வென்றிகொள் களிறு கண்டு வியந்துநீ யாரே யென்ன. (39)

இசைநிலா வெறிக்குந் திங்க ளேவிய தூத னென்பேர்
விசயனென் பார்க ளுன்பால் விடுக்கவந் துற்றே னென்ன
அசைவிலா தாகி யந்த வானையும் பயந்து நின்றே
விசயநீ வந்த தென்ன விளம்பென விளம்பு மன்றே. (40)

சந்திர சரசென் றெங்கள் சசிபக வான்பே ராலே
இந்தநற் கான கத்தி லிருஞ்சுனை யொன்றுண் டாக்கி
அந்தநற் சுனையி லெங்க ளையனுந் தேவி மாரும்
முந்திய சலக்கி ரீடை முயங்கியே பகலைக் கெல்லாம். (41)

தண்ணறுஞ் சுனைக்குக் காவல் வைத்தெமைத் தாங்கள் போவர்
விண்ணவ ருலகத் தாரும் விரும்பினுந் தொடப்ப டாது
நண்ணிய சுனைநீ ருண்ண நாடினை நீயென் றெங்கள்
அண்ணலார் சினந்துன் பக்க லனுப்பினார் தடுத்தி யென்றே. (42)

தூதுசொல் வாரி யற்கை துங்கவா ளுருவிக் கொண்டு
கோதமாய்க் கேட்பார் முன்னுங் கூறுவ கூறல் வேண்டும்
யாதவர் கூறி னாலு மிகலினர் தூத ரேனும்
மூதறி வரசர் தூதர் முனியுனு முனியா ரன்றே. (43)

தன்னுடல் வலியி னாலே தான்பெரி யரைப்ப கைத்தால்
பின்னவர் சினந்து வெல்லப் பெற்றுயி ரிழத்தல் வேண்டும்
அன்னதை நினையா மற்பின் பவர்பகை நினைத்தா ரேனும்
முன்னரே வணங்கிப் போற்றின் முடிவுறா ராவி மன்னோ. (44)

மூவரின் முதல்வ ரான முனைவனார் முடிமேல் வாழும்
தேவனைப் பகைத்த சிந்தைச் செயலினை யினித்த டுத்தே
மேவுதண் சுனைமேல் வைத்த வேட்கையை விடுத்திந் நேரம்
போவதே கரும மென்று புத்திகள் பலவுஞ் சொல்லி. (45)

இங்கிவை யனைத்து நானே யியம்பின னுன்னை வேண்டித்
திங்களும் பகவ னுன்மேற் சினந்தது கொஞ்ச மல்ல
அங்கவன் சினமு நானே யாற்றுவ னவன்பாற் சென்றே
வெங்களிற் றினத்தி னோடே மீள்கநீ யென்று கூற. (46)

தந்தியி னரசு மந்தச் சசந்தனை நோக்கி நீசொல்
சந்திர னெனுந்தே விந்தத் தடந்தனிற் குடைவ தெப்போ
தந்தவே ளையினில் வந்தங் கவனடி போற்றி யானும்
உய்ந்துமீண் டேகு வேனென் றோதலு முயனன் றென்று. (47)

அன்றிர வுடன்கொண் டேகி யலைபுனற் றடத்திற் றோன்றும்
துன்றுவெண் மதியின் சாயை சுட்டிநீ காண்க வென்ன
நன்றதைக் கண்டு திங்க ணாதனே யென்றுஞ் சூழ்வுற்
றொன்றிய வுடுக்க ளன்னோற் குரியநன் மாத ரென்றும். (48)

ஆனையு நினைந்து நெஞ்ச மழிந்துபின் றெளிந்து நின்று
நானிதை யறியே னெங்க ணாதனே பொறுக்க வென்று
வானுயர் மதியை நோக்கி வணங்கியே மீண்டு போகக்
கானுறு முயல்க ளெல்லாங் களித்துவாழ்ந் திருந்த வன்றே. (49)

அப்படி யாக நாமு மரசன்பேர் பெரிய தாகில்
செப்பிய பகைவந் தாலுஞ் செயிக்கலா மதுவு மில்லை
எப்படி பரசு நாட்ட வியைந்துநீர் முகூர்த்த மிட்டீர்
தப்பிது நினைந்தீ ரென்று சாற்றியே பின்னுஞ் சொல்லும். (50)

பாவிகண் மோனர் போலும் பலவிர தியர்கள் போலும்
ஓவறு சகாயர் போலு முறமுறைச் சுற்றம் போலும்
மேவுவ ரவரைச் சேரின் மேன்மைய ரேனு முய்யார்
பூவையு முயலு முன்னோர் பூனையைச் சேர்ந்த வாறே. (51)

## மைநாவும் முயலும் மோசம்போன கதை

என்னவக் கதையே தென்றே யினப்பற வைகள்வி னவ
முன்னமோர் மரத்தின் மேலே முயங்கிறை னிருக்கும் போது
தன்னிக ரின்றி வாழுந் தனிமுய லொன்று வந்தே
உன்னுமோர் பொந்திற் சேர்ந்தங் குட்புகுந் திருந்த தன்றே. (52)

பூவையொன் றங்கு வந்திப் பொந்துநா னிருக்கும் வீடு
நீவரு வானே னென்ன நிழலொடு தருக்கள் சாலை
வாவிநற் கூபஞ் செல்லும் வழியினிற் றண்ணீர்ப் பந்தல்
சாவடி யிவைக ளெல்லாஞ் சகலர்க்கும் பொதுவே யென்ன. (53)

ஆங்கவை யிரண்டுஞ் சண்டை யாகிப்பின் மத்தி யஸ்தர்
தங்களைக் கேட்போ மென்று தனிமுய லழைத்துப் போக
இங்குநாம் வழக்கா வந்தோ மிருதலை வழக்குந் தீர்க்கும்
துங்கரா ரென்று பூவை சொல்லவே முயலுஞ் சொல்லும். (54)

கருதிய யமுனை யாற்றங் கரையிலே தவத்தைப் பண்ணும்
பொருவில்கூர்ம் பல்ல னென்னும் பூனையார் சொல்வா ரென்ன
வெருவியே பூனை பக்கன் மேவிநாஞ் செல்வ தெவ்வா
றுரையெனத் தூர நின்றே யுரைப்பமென் றழைத்துப் போக. ()

இருவரும் போனா ரந்த விருடியார் தவத்தைக் கண்டார்
பெரியவ ரிவர்தா நம்மைப் பிடிப்பது செய்யா ரென்று
கருதினர் பணிந்தெ ழுந்தார் கைகளுங் கட்டி நின்று
பரவினர் யோக நீங்கிப் பார்த்தனர் பூனை யாரும். (56)

ஆரெவர் நீங்க ளம்மை யறிந்துநீ ரிங்கு வந்த
காரியஞ் சொல்லு மென்று கபடனு ருரைக்கத் தங்கள்
பேரோடு வழக்குஞ் சொல்லப் பெருகிய மூப்பி னாலே
நீருரைப் பதுகே ளாது நெருங்கிவந் துரைக்க வென்ன. (57)

சற்றிடங் கிட்டி வந்து சாற்றவிம் மாற்றங் காதில்
உற்றது போலும் பாதி யுறாதது போலுங் கேட்டோம்
மற்றினிப் பக்ஷ பாத வழக்குநா முரைப்ப தில்லை
குற்றமிங் கொருவர் மீதிற் கூறிடிற் கோப மாமே. (58)

தருமமே விரும்பு வாரைத் தருமமே விரும்பிக் காக்கும்
தருமமே யிகழு வாரைத் தருமமே யிகழ்ந்து நிற்கும்
தருமமே மெய்யாய் நின்று சகலமுஞ் செய்த லாலே
தருமமே சொல்வ தல்லாற் சற்றுநாம் பொய்சொல் லோமே. ()

எண்ணிய விரத மெல்லா மியற்றின மிவைக்கு மேலாம்
புண்ணிய விரத மென்னும் பொய்சொலா விரத மொன்று
நண்ணிய வுயிரைக் கொல்லா நலந்தரு விரத மொன்று
மண்ணினி லனுஷ்டிப் போநாம் வழக்கிலோ ரஞ்சொ லோமே. ()

கிட்டநீர் வந்து சொன்னாற் கேட்குநங் காது நம்மை
விட்டுநீர் தூர நின்று விளம்பினாற் கேளா தென்று
துட்டனார் மாரீ சத்தாற் றுலங்குகூர்ம் பல்ல னென்பே
ரிட்டமாச் சாலன் சொல்ல விவைதம துளத்தி லெண்ணி. (61)

மெய்கள்போற் சொன்ன வெல்லாம் விசுவசித் திரண்டுஞ் செல்லக்
கைகளாற் பிடித்துக் கண்டங் கடித்திரத் தங்கு டித்தே
செய்கப டான பூனை செருக்கியங் கிருக்கச் சேர்ந்த
மொய்சிறைப் பூவை யோடே முயலுமங் கிறந்த வன்றே. (62)

ஆகையாற் புல்லி யோரை யடைந்திடிற் கெடுவ தல்லால்
ஓகைகூர்ந் திருப்ப தில்லை யுலகினி னீதி யீதே
கூகையை யரசு நாட்டக் குறிப்பது தீதே யென்று
காகமு னெழுந்து போகக் கலைந்தது பறவைக் கூட்டம். (63)

அன்றுதொட் டின்று காறு மருங்கொடிக் குலத்தின் மேலே
துன்றிய கூகைக் கூட்டந் தொடர்பகை வைத்த தென்ன
மின்றிக ழமைச்சன் சொல்லை வினவிய மேக வண்ணன்
இன்றுநா மறிந்தோ மந்த விகலென வுளத்தி லுன்னி. (64)

கூறிய நீதி யான கொள்கையு மறிந்து நெஞ்சம்
தேறிநீ யுரைத்த தெல்லாந் தெளிந்தன னெனக்கொண் டேகி
வேறுமோ ரிடத்தில் வைகி மேலினிச் செய்யு மாறு
கூறுக பெரியோ யென்னக் குறித்துமந் திரியுங் கூறும். (65)

சந்திவிக் கிரகத் தாலே தரியல ரிடத்திற் சென்று
வந்துநான் சேரு மட்டு மற்றுமோ ரிடத்தி ருந்து
சிந்தையில் வைத்து வேறோர் செவியுறா தடக்கி லிந்த
மந்திரம் பலிக்கு மென்று வளம்படப் புகன்ற தன்றே. (66)

ஆங்கது கேட்ட காக வரசனு மவரை வெல்லப்
பாங்குள வுபாய மேது பகரென வினவ லோடும்
தீங்குள வஞ்சர் மூவர் சேர்ந்தொரு மறையோ னாட்டைத்
தாங்கொளப் புரிந்த மோசந் தனைச்செய்து வெல்வே னென்றான்.

### அந்தணனை வஞ்சித்த கதை

அக்கதை தெரியச் சொல்லென் றறைதலு மமைச்சன் கூறும்
மிக்கதோர் வேள்விக் காக வேதியன் வேற்றூர் சென்று
தக்கநல் லாடு கொண்டு தனதுதோண் மீது தாங்கித்
தொக்கவுண் மகிழ்வின் மீண்டு தொல்பதிக் கேகும் போது. (68)

வஞ்சகர் மூவ ரந்த மறையவ னாட்டை வௌவ
நெஞ்சினி னினைந்தே யந்த நெறியிடை யொருவன் முன்போய்ச்
செஞ்சுடர்த் தீவ ளர்க்குஞ் செல்வநீ நாயைத் தோள்கொண்
டஞ்சுத லின்றிச் செல்ல லாகாத தென்று கூற. (69)

ஆட்டனை நோக்கி யாக பசுவினைச் சுணங்க னென்றாய்
கெட்டனை யோகண் ணென்று கிளத்தியே மறையோன் செல்ல
இட்டனே போலி ரண்டா மிழிஞனங் கெய்தி மேலோய்
விட்டுயிர் போன கன்றை மேற்கொள றகாதென் றோத. (70)

பழுதறு மறையோ னந்தப் படியவன் றனையும் வைது
வழிதனி லேக மூன்றான் வஞ்சன்வந் தந்த னாள
எழுதரு நூல்க ளெல்லா மிழிந்தசண் டாள மென்னும்
கழுதையைச் சுமந்து செல்லுங் காரியந் தகுமோ வென்றான். (71)

நாடியே மறையோ னிந்த நரர்கள்வெவ் வேறு கூறக்
கூடிய வுருவெவ் வேறு கொண்டுதோன் றிடுத லாலே
ஆடிரா க்ஷதப்பி றப்போ வென்னுமை யத்தால் விட்டான்
நீடிய வஞ்சர் கொண்டா ரெனவுரை நிகழ்த்திற் றன்றே. (72)

மேகவண் ணனும கிழ்ந்து மிருந்தகா கங்க ளோடே
எகியோர் மலையி னுச்சி யேறியங் கிருக்க வந்தக்
காகமந் திரியுங் கூகை கணத்தைநாஞ் சேரு மாறங்
கேகுவோ மென்னு முன்னே யிரவிபோய் மறைந்த தன்றே. (73)

மாலையம் பொழுதே கண்கண் மறைந்தன சிரஞ்சீ விக்குச்
சாலவே கூகை மன்னன் றன்படை முழுதுங் கூட்டி
நாலுதிக் கிலும்வ ளைந்து நம்முடைக் கண்ணைத் தப்பி
ஆலின்மே லிருக்குங் காக்கை யனைத்தையுங் கொல்வோ மென்று.

வந்தது காக்கை யொன்று மரத்திலில் லாமை யாலே
மந்திரி மாரை நோக்கி வாயசக் கூட்ட மான
இந்தவன் பகையை வென்றே மினிநமக் கெதிரா ரென்றே
சிந்தையின் மகிழ்ச்சி யோடே செருக்கியங் கிருக்கும் போது. (75)

கள்ளமா யிதனை வெல்லக் கருதியங் கிருக்குங் காகம்
வெள்ளமாய்ப் பரவி வந்த மேவலர்ப் படையைக் கண்டு
கொள்ளையா யிறந்த காக்கை குறையுமின் றழியா முன்னப்
புள்ளினுக் கரசன் றப்பிப் போனதே போது மென்று. (76)

சிறகுக ளொடிந்தி ரத்தஞ் சிதறமெய் சோர்ந்து சாவு
குறுகின காலம் போலக் கொடிப்பிணத் திரளுக் குள்ளே
மறைபடக் கிடந்து நெஞ்சில் வருத்தமோ டவஸ்தை யாகி
முறையிடு வாரே போல மொழிகளுந் தேய்ந்து கத்த. (77)

கூகைமன் னவனு மந்தக் குரல்செவி யுறுத லாலே
காகமே தோகி டந்து கதறுகின் றதுபா ரென்ன
ஏகியே தூதன் பார்த்தங் கெய்துகாக் கையைக்கொ ணர்ந்து
வாகுமன் னவன்முன் விட்டான் மன்னனீ யாரை யென்ன. (78)

வேறு

என்னுடைப்பேர் சிரஞ்சீவி யென்பார்க ளருண்மேக
வன்னனுடை முப்பாட்டன் றலைமுறையில் வந்தவனுன்
சொன்னபுத்தி யருமையினுற் சுகமாக வீற்றிருந்தார்
அன்னவன்வா யிலிற்கொடிய வமைச்சர்வந்து தலைபட்டார். (79)

அங்கவர்க டன்மார்க்க மரசனுக்குப் போதித்தே
உங்கள்குலத் தோடுபொர வொருமித்தா ரிதையறிந்தே
இங்கிதுநீர் நினைந்தீரே லிடருறுவீ ரெனமறுத்தேன்
தங்கண்மத வலியாலே தாம்பொருத வந்தார்கள். (80)

இப்படியே சிலபகலி லிகல்புரிந்து வந்தென்னை
எப்படிநீ புத்திசொன்னு யென்பார்க ளோரிரவில்
தப்பறவே வளைந்துகொண்டு சாடுவா ரவரென்றேன்
அப்படியே யென்னவிரா வடித்திழுத்துப் போட்டீரே. (81)

கால்வேறுந் தலைவேறுங் கருஞ்சிறகு வெவ்வேறும்
வால்வேறுங் குடர்வேறும் வாய்வேறுஞ் சுவல்வேறும்
தோல்வேறுந் தொடைவேறுந் துண்டாகத் துணிந்திறந்தார்
நால்வேறு மந்திரியு நானுமர சனும்பிழைத்தோம். (82)

படுகளஞ்சோ தித்தார்கள் பட்டபிணத் திரளின்கீழ்
நடுநடுங்கி மறைகிடந்து நாற்பதுகா கம்பிழைத்த
கொடியரச னிவையெல்லாங் கூட்டியினி நாஞ்செய்யும்
அடைவுசொலு மென்றுதன தமைச்சர்களைக் கேட்டானே. (83)

பகற்பொழுதில் வளைந்துகொண்டு பழிவாங்கு வோமென்றும்
அகப்படுமோ நமக்கென்று மப்புறம்போ வோமென்றும்
விகற்பமக் குள்ளிருக்க வெல்லும்வகை யேதென்றும்
வகைப்படநால் வருஞ்சொன்னார் மன்னவனுங் கேட்டிருந்தான். ()

இன்னமுமக் கறிவிலையோ விகலொழிந்து நாங்கூகை
மன்னவனைப் பணிந்திருந்து வாழ்வதுகா ரியமென்றேன்
சொன்னவுட னெனையடித்துத் தொவைத்திழுத்துப் போட்டந்த
மன்னவனுந் தாங்களுமாய் மறைந்தெழுந்து போனாரே. (85)

செத்ததென்று போட்டுவைத்துச் சென்றார்க ளன்பிழைத்தேன்
உத்தமனே நின்பதத்தி லோடிவந்து விழவென்றால்
மெத்தவடித் ததனாலே மெலிந்துகிடந் தேனினியுன்
சித்தமென்பாக் கியமென்னாச் சிரஞ்சீவி வணங்கலுமே. (86)

மனமிரங்கி யரசனுந்தன் மந்திரிக டமைவினவச்
சினமிகுந்த புலிவலையிற் சிக்கிலதை விடலாமோ
எனமொழிந்தா ரிவர்தம்மிற் குருதிக்கண் ணனுமெண்ணித்
தனையடைந்தார் தமைக்கோற றருமமல வென்றானே. (87)

தீத்தொழிலில் கொடுங்கண்ணன் றனைவினவத் தெவ்வர்வரின்
மூத்தவர்கண் மனுநீதி முறையுரைத்த விதிப்படியே
காத்தருளக் கடவதல்லாற் கடுங்கொலைசெய் தவர்தமையும்
நீத்தவரை யுங்காணே னீணிலத்தி லென்றானே. (88)

மெய்த்தகொள்ளிக் கண்ணனெனு மந்திரியை வினவலுமே
சத்துருவா னாலும்வந்து தனக்கினிமை யுரைத்தடைந்தால்
உத்தமரா னவர்வரிசை யுதவியவ ருயிர்காப்பார்
மெய்த்தபுக ழோடுலகின் மேவிமிக வாழ்வாரே. (89)

## கோமுட்டிக்குக் கள்ளன் உதவி செய்த கதை

திருடவந்த கள்ளனுக்குத் திரவியவான் கோமுட்டி
கருணையுட னுபசரிக்கக் கள்ளனுமோ ருதவிசெய்த
தொருகதையுண் டக்கதையே துரைப்பாயென்ன வொருமையுடன்
பெருகுநிதி படைத்துளகு பேரமித்ர னெனும்பெயரோன். (90)

வெண்ணரையன் றிரைகவுளன் விதிருடம்ப னொருநோக்கன்
பெண்ணமுத மடவார்க்குப் பிரியமிலா முதிர்மூப்பன்
வண்ணமனை யாளொருத்தி மாரனிர தியைப்போல்வாள்
நண்ணிலளங் கவனைநெஞ்சி னாடியவ ளுண்டாளே. (91)

எள்ளளவு மவன்மீதி லிச்சையிலா ளோரிரவில்
கள்ளன்வர நடுநடுங்கிக் கணவனைப்போய்த் தழுவுதலும்
உள்ளமகிழ்ந் தவனாலே யுற்றவின்பம் பெற்றனனென்
வெள்ளநிதி மிகவுளநீ வேண்டுவகொண் டேகென்றான். (92)

கள்ளனுமங் குளமகிழ்ந்து கன்னியுனைத் தழுவினதே
வெள்ளநிதி யின்றெனக்கு வீட்டிலே விழுந்ததொக்கும்
உள்ளமகிழ்ந் தெந்நாளு முனையிவள்வந் தணையாமல்
எள்ளியிருந் தால்வருவே னெனைநினைப்பா யெனப்போனான். (93)

அன்றளவு முதலாக வவள்பயந்து நடுங்கிமனம்
ஒன்றியிவ னொடுகூடி யுறங்கவவன் சுகமடைந்தான்
என்றுகதை சொலியிவனுக் கிதஞ்செய்தா லிதம்பெறலாம்
கொன்றதனா லேதுபலன் கொடும்பழியா மென்றதுவே. (94)

தகவுபெறு துநாநா சன்றனைநீ சொல்லென்ன
இகலினரா யினுமடைந்தே யிதஞ்சொல்வார் தமைக்காப்பார்
நிகரில்பிரா மணப்பேய்க்கு நெடுஞ்சோரன் றனக்குமுன்னாள்
அகமகிழ்ந்து வெகுமான மந்தணன்செய் தானெனவே. (95)

தெள்ளுகதை யேதெனவோர் திருநகரி லொருமறையோன்
உள்ளமகிழ் வொடுவளர்த்த வுயர்காம தேனுவினைக்
கள்ளனொரு வன்கருதிக் களவுகொள்வோ மெனவந்த
நள்ளிருளி லோர்பிர்ம்ம ராக்ஷசனுங் கண்டானே. (96)

கண்டவனீ யாரென்னக் கள்ளனுநீ யாரென்ன
எண்டிசையெண் ணும்பிரம ராக்ஷனா னெனவவனும்
மண்டுபொருள் கன்னமிடு மாசோர னானென்றான்
என்றனுநல் லிரவிருளி லிங்குவந்த தேதென்றான். (97)

சோரனுநீ வந்ததென்ன சொல்லெனவே யிந்தமனை
ஆரணவே தியனுடலை யருந்தவந்தே னெனவரக்கர்
தீரனுமிங் கிவன்பசுவைத் திருடவந்தே னெனவிரண்டு
பேருமொரு மித்துடனே பெரியவன்முன் றிலையடைந்தார். (98)

வந்தவிரு வோருமவன் வாயிலிலே நின்றுகொண்டே
அந்தணனு ருயிரைமுந்தி யருந்திடுவே னுனென்றும்
பந்தமுட னிற்குமிந்தப் பசுவைமுந்திக் கவர்வனென்றும்
இந்தவகைத் தங்களிலே யிகலுமொலி கேட்டலுமே. (99)

மிக்கமறை யோனுமிவர் விவகாரந் தனையறிந்தே
மக்களுந்தா னுங்கூடி வலியதடி கைக்கொண்டு
புக்கவிரு வோர்தமையும் பொன்றவடிப் போமென்று
சிக்கெனவா யிலிற்கதவைத் திறந்துபுறப் பட்டாரே. (100)

மறையவனே நின்னுயிரை வதைக்கவந்தா னிவனென்றும்
குறைவறநின் பசுக்களவு கொள்ளவந்தா னிவனென்றும்
முறைமுறையா யிருவரிவர் மொழிந்துநின்று ரதுகண்டு
நிறைசுருதி மாதவனு நெஞ்சுகளி கூர்ந்தனனே. (101)

அன்றுமுத விருவோரு மந்தணனு முறவாகித்
தன்றனைவர் தமைப்போலச் சார்ந்துநட்புற் றிருந்தார்கள்
இன்றிவனுக் குபகார மியாமுஞ்செய் தோமாகில்
நன்றியல்லாற் றீதன்று நமக்கிவனுந் துணையென்றான். (102)

இவையுரைத்து மன்னவகே ளிடருழந்து தனையடைந்த
சவிமாடப் புறாவுக்காத் தன்றசையைத் துலையிட்டான்
சிவிராச னெனவுலகோர் செப்புவது மறியாயோ
தவருமற் சரணமெனிற் றற்காத்த னெறியென்றே. (103)

## தச்சன் கதை

தச்சனொரு வன்மனைவி தன்னொடுசோ ரனையுமெடுத்
துச்சிதமாத் தலையினில்வைத் துவகையொடு கூத்தாடி
மெச்சியதோர் கதையெனநீ விளம்புகவக் கதையென்ன
மச்சுலவு மாளிகைசூழ் வளநகரொன் றதிலொருவன். (104)

பேரிரத காரனெனும் பெருந்தச்ச னவன்றேவி
சோரனொருவனைக்கூடிச் சுகங்காணத் தச்சன்வந்து
சேரிலவன் மீதிலன்பு சிறிதுமிலா ளிதென்ன
காரணமென் றங்கவனுட் கருதிவிசா ரித்திருந்தே. (105)

வேறொருவன் றோணசையை விரும்பிநமைக் கண்டளவில்
சீறுதலாற் சுரதநலஞ் சிறிதுமிலை யெனத்தச்சன்
தேறியதைச் சோதிக்கச் சிந்தித்தே யோரூர்க்குச்
சேறலெனப் புறப்பட்டுச் சென்றிரவின் மீண்டனனே. (106)

கட்டிலின்கீ ழொளித்திருந்தான் காரிகையுஞ் சோரனுக்காள்
விட்டவனை யழைப்பித்து மேவுதலு மவன்கால்கள்
பட்டனதன் னுடன்மீதிற் பாவையது கண்டஞ்சி
நெட்டுயிர்த்து விசாரமிட நேரிழைதன் முகநோக்கி. (107)

உனக்குமன மென்மேலோ வுன்கணவன் றன்மேலோ
எனக்கழற வவண்முனிந்தே யெவ்வனதோ வூத்தாவென்
மனத்தையின்று பெண்புத்தி மயக்கிவந்த தொருபாவம்
எனக்கவனே தெய்வமவ னிறக்கிலிறப் பேனென்றாள். (108)

அந்தமொழி கேட்டலுமே யகமகிழ்ந்து ரதகாரன்
முந்திரினைத் துத்தனது முன்னவனைக் கூடினதும்
சிந்தையிலெண் ணாமலவர் சேருமஞ்சத் தடனெடுத்து
வந்துதலை மீதுபட வைத்துக்கொண் டாடினனே. (109)

கண்ணார வவனியற்றுங் கருமமெலாங் கண்டிமதை
எண்ணும லோர்வார்த்தை யிதஞ்சொன்ன வொன்றலவோ
பண்ணருந் தேர்த்தச்சன் பரிவுற்ற னிவன்மனத்தில்
நண்ணரைப் பகைத்துவந்தா னமக்கிவனே யுறவென்றான். (110)

என்றுசொலப் பிரகார நாசனைப்பார்த் தினியுரைப்பாய்
நன்றுனது கருத்தையென நல்லவர்போ லெய்திடினும்
துன்றுபகை யுற்றவர்க்கு ரகசியந்தோன் றாதடக்கல்
ஒன்றுதிறற் செய்கையென்றே யொருகதைநன் குரைசெய்யும். ()

## இரகசியம்விட்டுப் பாம்புக ளிறந்த கதை

விண்டுவன்ம னென்னுமொரு வேந்தன்வயிற் றுறுநோயால்
கொண்டுதுய ருடன்மெலிந்தே யாத்திரையிற் குறிப்பினைவைத்
தெண்டிசையி னுந்திரிந்தே யெம்பிரான் கோயிலொன்று
கண்டதனில் வசித்திட்டான் கடவுளடி யுளங்கொண்டே. (112)

அப்பதியி லிருந்துலகை யளிக்குமிறை பலியென்பான்
ஒப்பறுதன் புத்திரிய ரிருவரிலங் கொருத்திதனைச்
செப்பியதீ துளத்தெண்ணிச் செயிர்த்தந்த விண்டுவன்மன்
கைப்படநீர் விடுத்தளித்தான் காரிகைகற் புடைமையினால். (113)

கணவனே தெய்வமெனக் கருதியவன் றனக்கிசைந்து
பணிபுரிந்து பரதேசம் படரும்போ தொருநாளின்
உணவடலுக் குபகரண மூர்புகுந்து கொளப்போனாள்
பிணியுடையான் கண்ணுறங்கப் பெரும்பாம்பொன் றங்கொலிக்க.

அவ்வொலிகேட் டவன்வயிற்றி னரவுமெலித் திடவிரண்டும்
வெவ்வியவா தம்புரிந்து மேவுதலு மப்போது
நவ்விவிழி யிவன்றுணைவி நண்ணியொளித் ததுகேட்கக்
கவ்விவயிற் றாவினொடு புற்றரவு கழறுமால். (115)

பாவிநீ யிவ்வரச புத்திரனைப் படர்செய்யுந்
தீவினையென் னெனவுணவு செறிந்தகுடந் தனிற்சேர்ந்த
தாவறுமென் றனைநிந்தித் திடுவதென்னென் றதுசாற்ற
ஓவறுபுற் றரவமவன் கடுகுதின்றா லொழிகுவைநீ. (116)

சுகமடைவா னரசனென்றுஞ் சொல்லவயிற் றரவுவெகுண்
டுகுவைநீ வெந்நீரா லெனவுரைக்க விவ்விரண்டும்
பகர்தருநன் மொழிகேட்ட பாவையுமவ் வாறுசெய
புகைசெயுமவ் வரவிறக்க வேந்தனுமந் நோய்தீர்ந்தே. (117)

தன்னகரந் தனிற்சேர்ந்து தகவுபெறு மனைவியொடும்
இந்நிலத்தை யாண்டிருந்தா னாதலினா விரகசியம்
அன்னியர்தேர்ந் திடப்புகலி லதனாலுந் துன்பமுறும்
என்னவிசைத் தொருவேடன் கதைபின்னு மியம்புமால். (118)

## வேடன் கதை

வனமொன்றி லொருவேடன் வளர்குருவிக் கூட்டினொடும்
இனமொன்று வேட்டைகரு விகளுமெடுத் தேதிரியக்
கனமிருண்டு மழைபெய்யக் காற்றெழும்ப வவனடுங்கி
மனமருண்டோர் மரத்தின்கீழ் வந்திருந்தா னப்போது. (119)

தங்குமதன் மேலிருந்த புறவொன்று தன்பேட்டை
எங்ககன்ற தோவனத்தில் யாரேனும் பிடித்தாரோ
மங்கியதோ வெனப்புகல வதுகேட்டு வனசரன்றன்
அங்கையுறு கூட்டினுற்ற பெண்புறா வழுதுசொலும். (120)

முன்வினையா லிதுபெற்றே னாயினுநின் முனமடைந்த
இன்னவனுக் குபசாரம் புரியெனலு மெரிகொளுவி
அன்னவனை யழைத்துடலின் குளிர்போக்கி யாகாரம்
என்னைநீ யருந்தென்று வீழ்ந்திறக்க விவனோக்கி. (121)

அன்பினா னம்பொருட்டு வீழ்ந்தவிதை யருந்தியிடில்
துன்பம்வரு மெனப்பேட்டை விடுத்திடலுஞ் சூழ்ந்ததுவும்
தன்புருஷன் பிரிவதனால் வீழ்ந்திறக்கத் தகுமிரண்டும்
இன்பமுறு தெய்வவுரு வெய்திவா னுலகடைந்த. (122)

இரக்கமொடு வேடுவனு மெரிவீழ்ந்து கதியடைந்தான்
தரைக்குளுளந் தளர்ந்துசர ணார்த்தியென்று சார்ந்தார்க்கும்
புரக்கவருள் செயிற்றூமே பொன்றவரி னும்வருமென்
றுரைத்துப்பொன் னெச்சமிடும் பறவைகதை யோதுமால். (123)

## பொன்னெச்சமிடு பறவை கதை

பொன்னாக வெச்சமிடு மொருபறவை பொருப்பின்மேல்
பன்னாளு முறக்கண்டு பயில்வேட னதைப்பிடித்து
மன்னவா னிதைக்காணில் வாங்குவனென் னுயிருமெனப்
பின்னாய்ந்து வேந்தனுக்கிப் பெருமைசொலி யளித்தனனால். (124)

அவன்மணிக்கூட் டிடைவளர்க்க வமைச்சனுமங் கதுநோக்கிப்
புவியிலசம் பாவிதமாம் பொருள்கேட்டிப் படிபுரிதல்
நவையுறும்விட் டிடுதியென நயந்துரைக்க நரபதியும்
கவலையுற விடுத்திட்டா னீங்கியவக் கடும்புள்ளும். (125)

புரவலன்றன் மனைச்சிகரம் பொருந்தினான் முதன்மூடன்
விரவுமிரண் டாமூடன் வில்வேட னிவ்வரசன்
மருவுமூன் றாமூடன் மந்திரிநான் காமூடன்
சாதமென வுரைத்தந்தத் தனிப்பறவை நீங்கியதே. (126)

ஆதலாற் பகைவரென வறிந்தபின்னே நம்புவோன்
சாதலா கும்மிகழ்வு தானடைவா னென்றுரைப்ப
ஈதலா முளங்கொள்ளா தரசனிருந் திடநோக்கித்
தீதிலா வக்கூகை சிந்தைதிகைத் தேயுரைக்கும். (127)

இற்றைநாள் காறுமிந்த வரசனிடத் தினிதிருந்தேன்
பற்றியினி யொருமலையிற் பயின்றிருத்தல் வேண்டுகின்றேன்
மற்றதுவே னெனிற்குகையைக் கூப்பிட்டோர் வன்னரிதான்
பெற்றசுகம் போலென்றா னக்கதையென் பேசெனலும். (128)

## நரி சிங்கத்தின் மோசமறிந்த கதை

இரைதேடு மொருசிங்க மிக்குகையி னொளித்திருப்பின்
விரவினின்வந் தொடுங்குமது தனையுண்டு மிகுபசிதீர்ந்
துரமடைவோ மெனக்கருதி யுற்றிடலு நரிவந்து
பாவுசிங்கக் காற்சுவடு பார்த்துச்சோ திக்கவெண்ணி. (129)

குகையதனை யிருமுறைதான் கூப்பிடலு மதுபேசா
வகைகண்டு நமக்கஞ்சி வாய்விடா திருந்ததெனப்
பகையுறுகே சரிநினைந்து பன்னுகுரல் வேறாகத்
தகையினொடு மேனென்னச் சம்புவுமங் குண்ணடுங்கி. (130)

அப்பாநான் பிழைத்தேனென் றகன்றோடிற் றாதலால்
எப்பால ராயினுநன் காராய்த லியல்பென்னத்
துப்பான மித்திரர்க்குச் சொல்லியைந்தா மந்திரியும்
இப்பாரி லுறுந்தேய நோக்குவனென் றேகிற்றே. (131)

அரசனவன் போனபின்னே யடைந்தகா கத்தினையே
வருகவென வழைத்துவெகு மானங்கண் மிகச்செய்து
திரமுடைய மந்திரிநீ சிரஞ்சீவி யென்றுபல
கருமமுமன் னவன்வசமாக் கட்டளையிட் டிருந்தானே. (132)

அப்பொழுது காக்கையினா லடிபட்ட சிரஞ்சீவி
எப்படிநான் வைத்திருப்பே னிவ்வுடம்பைத் தீயிட்டே
செப்பமொடு கூகையெனச் சென்மித்துக் காக்கையெலாம்
தப்பறவே யடிப்பனென்று சாற்றவர சனுஞ்சொல்வான். (133)

## எலிக் கதை

இந்தமொழி சம்மதமா யெனுரைத்தாய் சிரஞ்சீவி
முந்தியயோ னியைமாற்ற முடியாதிங் கொருவருக்கும்
அந்தவகை சொல்லுவன்கே ளருந்தவமா முனியொருவன்
சிந்தையினி னிட்டையொடு சேர்ந்தொருநீ ழலிலிருந்தான். (134)

பருங்கெடுத்த பெண்ணெலியும் பருத்தின்வாய்த் தப்பியங்கே
இருந்தமுனி கரத்தில்விழ வேதெனவே நோக்கியவன்
அருந்தவத்தாற் பெண்பிள்ளை யாக்கிமனை யாள்கையிற்
பொருந்தவள ரெனக்கொடுத்தான் பூவையுமங் கதைவளர்ந்தாள்.

அந்தமின்னைப் பெலவானுக் களித்திடுவோ மெனமுனிவன்
சிந்தையிலெண் ணிக்கொண்டு செங்கதிரோன் றனையழைத்தே
இந்தமின்னை நீகொளென விரவியறிந் தெனைமறைக்கும்
முந்தியமே கம்பெலவான் முனிவவவன் கைக்கொடென. (136)

மேகத்தை யழைத்திவளை விரும்புகநீ யெனமுனிவன்
தாகத்தோ டுரைக்கவவன் றானுமறிந் தெனைத்துகளாய்
மாகத்தி லடிக்குமந்த வாயுபக வான்பெலவான்
மோகத்தோ டவற்களித்தன் முனிவாநன் றென்றனுமே. (137)

வாயுவையு மழைத்தவளை மணம்புணர்க நீயென்று
நேயமுட னிருடிசொல நிறைந்திடுமா ருதமறிந்தே
தூயவனே யெனைமறிக்குந் துங்கவரை யேபெலவான்
சேயிழையை யவற்கருளிச் செய்கவெனச் செப்பிடவே. (138)

மலையரையன் றனையழைத்து மங்கைமணம் புணர்கவெனக்
குலவரையு மறிந்துகொண்டே கூறுமுனி தனைநோக்கி
நிலவறையே யெனையறுக்க நினைக்குமத்த மூடிகமே
பெலமுடைய ததற்களித்தாற் பெருமையென வரைகூற. (139)

எலியரசன் றனையுமழைத் திவளைமணம் புணர்கெனவே
நலதிவளென் வளையில்வர நாடின்மணம் புணர்வனென
மூலமகளைத் தவமுனிவன் முன்னிருந்த படிதானே
எலியுருவ மாக்கிவிட்டா னிசைந்தவனுங் கொடுபோனான். (140)

ஆகையினால் யோனிதனை யாருமழித் திடமாட்டார்
காகவடி வொழிந்துனது கருத்தினினைத் ததுமுடிக்கும்
கூகைவடி வெடுக்கவுன்னாற் கூடாது நாமுனது
சோகமதை யகற்றிடுவோஞ் சுகமடைந்திங் கிருவென்றான். (141)

அவன்மனது வரநடந்தே யமைச்சர்களின் மேலாகித்
தவறறவே குகைவாயி றன்வசமாக் கிக்கொண்டோர்
திவச்மதி லமைச்சரொடுஞ் சேனையொடுந் தானுறங்கக்
கவடுசெய்தே குகைவாயிற் கடையினிற்றீக் கொளுத்திவிட்டான்.

புகையுடனே தீச்சூழப் பொருகூகைத் திரளெல்லாம்
குகையினுள்ளே மடிந்ததற்பின் கொடிகூகை மேல்வைத்த
பகைமுடித்துச் சிரஞ்சீவி பறந்துசிங்க மலையிருக்கும்
இகன்மேக வண்ணனொடு மினத்தோடுஞ் சேர்ந்தனனே. (143)

கண்டவுடன் மேகவண்ணன் கருத்திலடங் காமகிழ்ச்சி
கொண்டனன்மந் திரிகளுடன் கொடிக்குலமுந் தொழுதுநிற்கப்
பண்டுபழ காருடனே பழகியிந்நா ளென்மனதில்
கொண்டபகை தீர்த்தாயே கொடிக்கரசே யெனச்சிறகால். (144)

புல்லிமுகத் தோடுமுகம் பொருந்தவைத்தே மோந்துகொண்டே
எல்லையிலாக் களிப்பினொடு மிருந்தவனை யருகிருத்திச்
சொல்லிமுடி யாதபெருந் தோத்திரங்கள் பலவமுத்திப்
புல்லியராம் பகைஞரொடு பொருந்தியவா றரிதெனவே. (145)

செப்பரிய தம்பிகளுஞ் சேனைகளும் புடைசூழ
ஒப்பரிய வரியணையுற் றுலகாளுந் தருமனுந்தான்
தப்பிவரு நாளறிந்து சன்யாசி வடிவெடுத்து
மெய்ப்பொடுதன் னேவல்செயும் விராடனிடத் திருந்திலனோ. ()

புசபெலத்தால் வலிமையினாற் புகழ்பெற்ற திறல்வீமன்
வசையாச னடுக்களையின் மடையனென விருந்திலனோ
விசையனுநா டகசாலை மின்னாரை யாட்டுவிக்கும்
இசைபெறுநட் டுவனாகிச் சிகண்டியென விருந்திலனோ. (147)

நகுலனுமங் கவன்குதிரை நடைபழக்கு வானாகித்
தகைமையினா லொடுங்கியவன் றனைச்சேவித் திருந்திலனோ
புகழொடுமுக் காலமறி புனிதனெனுஞ் சகதேவன்
இகழுமினப் பசுமேய்க்கு மிடையனென விருந்திலனோ. (148)

எரிதழலி லவதரித்தே யிரவிகுலத் தினில்வளர்ந்து
விரிநிலவின் குலம்புகுந்த மின்னனையாள் பாஞ்சாலி
வரிவளைக்கை யுத்தரிக்கு மாலினியா யிருந்திலளோ
கருமமுற்று மளவுமவர் கருத்தடங்கி யிருப்பரென்றே. (149)

மேகவண்ணன் சலிப்பாற்ற மீளவுமே வாண்முனையில்
யோகமிருந் தவர்போலு மோங்கெரிபுக் கவர்போலும்
நாகவளை யுட்புகுந்து நண்ணினவர் போலுமுன்றன்
ஆகம்வருந் தினையோவென் றாற்றிடலுஞ் சிரஞ்சீவி. (150)

தேவநின தருளாலே தீவினையெ லாங்கடந்தேன்
நீவிரவி யிருந்ததல நீத்துவன வாசத்தில்
மேவியுன்றன் றிருமேனி மெலிந்ததெல்லா நான்செய்த
பாவமன்றோ வெனக்கூறிப் பரிவினுட னிருத்தலுமே. (151)

ஆண்டொருநா டானிருந்த வயோத்திவிட்டு வனவாசம்
வேண்டினது மவர்தேவி மிக்கசிறை புக்கதுவும்
தீண்டரிய ராவணனைச் செற்றதுவுந் தேவிசிறை
மீண்டதுவும் ராகவனார் வினைப்பயனன் றோவென்றாம். (152)

துங்கநள னரசிழந்து தூயதமை யந்திதனைக்
கங்குலிலே துகிலரிந்து கானில்விட்டுப் போனதுவும்
வெங்கணர வந்தீண்ட மேனிபழு தானதுவும்
தங்கியதீ வினையாலே தான்விளைந்த வாறென்றான். (153)

பாண்டவர்சூ தாடினதும் பாரிழந்து நின்றதுவும்
மூண்டதழ லிற்பிறந்தாண் முனைகுலைத லானதுவும்
நீண்டபெருங் கானகத்தி னிலையிரிந்து திரிந்ததுவும்
ஈண்டியதீ வினையாலே யியன்றதல வோவென்றும். (154)

பொன்னிழந்து நாடிழந்தும் பொருவில்குமா ரனையிழந்தும்
பன்னருந்தே வியையிழந்தும் பறையனுக்கூ ழியஞ்செய்தும்
தன்னுடம்பு தான்விற்றுஞ் சத்யவரிச் சந்திரனும்
மன்னியதீ வினையாலே மாழ்கினனன் றோவென்றும். (155)

ஆகையினால் வினைப்பயனை யார்கடந்தார் நாமுமந்தக்
கூகையினா னம்முடைய குலமிழந்துந் தலமிழந்தும்
போகமிழந் தும்மலையிற் புக்கொளித்தோ மென்றுமிதை
நீகருதி நங்குலத்தை நிறுத்தினையென் றும்புகழ்ந்தான். (156)

சத்துருவை யொருவேளை தலைமேலுந் தோண்மேலும்
வைத்திருந்து சமயம்வந்தால் வதைத்திடவேண் டும்முனமோர்
துத்திவிரி கருநாகந் தோண்மேலுந் தலைமேலும்
வைத்திருந்து தவளைகளை வதைத்தகதை போலுமென. (157)

## பாம்பு தவளையைச் சுமந்த கதை

வழுத்துகதை யேதெனவோர் மந்தவிட னெனுநாகம்
கொழுத்ததவ ளைக்குலத்தைக் கொன்றுதின்ன வேகருதி
முழுத்ததவ ளைக்கூட்ட முயங்கியவோ டைக்கரைமேல்
எழுத்தைநினைத் திருப்பவர்போ லிருந்துதுய ரப்படவே. (158)

சாலபத னென்கின்ற தவளையர சனுமங்கோர்
கோலவரித் தவளையெனுங் குதிரைவா கனமேறி
நாலுவகைச் சேனைகளு நல்லமைச்சர் களுஞ்சூழச்
சீலமொடு மேளவகை சில்தவளை சேவிக்க. (159)

பவனிவரும் வேளையிலே பாம்பரச னொருகரைமேல்
கவலையுட னிருக்கவவன் கண்டொருதூ தனையனுப்பி
இவனிருக்கும் வகையேதிங் கென்றறிந்து வருகவென
அவனருகிற் சென்றிவனீ யாரிருப்ப தேதென்றான். (160)

நாகவிறை நானென்பேர் நல்லமந்த விடனென்பார்
போகிபல சூழவொரு புற்றிலிருந் தாசாள்வேன்
யோகிதனைத் தீண்டிவிட்டேன் யோகிதவ ளையைச்சுமப்பாய்
ஆகியதுதா விரையு மருந்துவைநீ யெனச்சபித்தான். (161)

சாபத்தி னாலெனது தலையில்விதி தனைநினைந்தேன்
ஆபத்து நீங்கவுங்க ளரசனைநான் சுமக்கவந்த
சோபத்தா லிங்கிருந்தேன் றூதவர சர்க்குரைத்தேன்
ஆபத்து நீக்கிலுங்கட் கடிமையெனத் திரிவேனே. (162)

எனவுரைத்தான் றூதனும்போ யிவ்வாறே சொலமகிழ்ந்து
தனதமைச்சன் றனையழைத்துச் சாலபதன் கேட்பவவன்
சினமிகுத்த பணியரசன் றினமுநமைச் சுமந்தானம்
மினநிகர்த்த சாதியிலை யென்றுலகும் புகழுமென்றான். (163)

அப்பொழுதே சாலபத னரவரசன் றனையழைத்தே
எப்பொழுது நமைச்சுமந்தா லிரையுனக்குத் தினமொன்று
தப்பறவே தருவமென்று சத்திபெறக் கூறலுமே
மெய்ப்புடனே மந்தவிடன் மிகக்குனிந்தா னெதிர்புகுந்தே. (164)

ஏறினான் சாலபத னேந்திநின்றான் மந்தவிடன்
தேறினா னிவரையினித் தின்னலா மெனவெண்ணிச்
சாறினா னுனைப்பிரியேன் சாலபத னேயென்று
கூறினான் மனமகிழ்ந்து கொடுத்தானங் கொருதவளை. (165)

இவ்வாறு தினந்தினமு மிதஞ்சொல்லி யிரைநுகர
அவ்வாறு தவளையெல்லா மடங்கலுமே விழுங்கிவிட்டான்
ஒவ்வாத சாலபத னொருத்தனுமே தனித்துநமக்
கெவ்வாறு மோசம்வந்த தெனக்கருதி யிருந்தானே. (166)

மந்தவிட னாருமவன் மனக்கவலை தனையறிந்தே
மூந்தியதன் வளைவாயின் முகத்தின்மெள்ள விடுத்தலுமே
குந்தியவர் வளைபுகுந்தார் கொடியமந்த விடனாரும்
புந்திமகிழ்ந் தவர்தமையும் புசித்துவிட்டா ரெனக்கூறி. (167)

ஆகையினா லரசர்களு மமைச்சர்களு மறிவுடையோ
ராகியிருந் தாலன்றி யவிவேக ராயிருந்தால்
கூகையினம் போலுமந்தக் குறுந்தவளை யினம்போலும்
ஆகுமெனச் சிரஞ்சீவி யறைந்தனன்வேந் தனுமறிந்தான். (168)

புத்தியினா னன்மனத்திற் பொறுமையினாற் றிறமையினால்
சித்திகளா வதுபோலச் சேனைகளாற் றிரவியத்தால்
வைத்திடுகோ பங்களினான் மானத்தாற் றன்மனத்திற்
சத்தியினா லொருகருமந் தானுமுடி யாதெனவே. (169)

சொல்லியந்த மேகவண்ணன் சூட்சிபல தந்திரங்கள்
வல்லசிரஞ் சீவியொடு மற்றுமுள்ள வமைச்சரொடும்
நல்லகொடிக் குலங்களொடு நாடிமுன்பு தாமிருந்த
தொல்லைவட மரமடைந்து சுகமாக விருந்தானே. (170)

மூன்றாவது தந்திரம்
சந்திவிக்கிரகம் முற்றிற்று.

நான்காவது தந்திரம்

# லப்தஹானி

அல்லது

# அர்த்தநாசம்

(தன் கையிற் கிடைத்த பொருளை இழத்தல்)

**[Spending one's property to gain an object]**

இந்துசேகரனார் தில்லை யிறைவர்தம் மருளி னாலே
முந்திய மித்ர பேத முயங்கிய சுகிர்ல்லா பம்மே
சந்திவிக் கிரக மூன்றுஞ் சாற்றின மர்த்த நாசம்
செந்தமிழ்க் கவிதை யாலே சிறிதுநாம் பகர லுற்றாம். (1)

ஆதிதந் திரங்க ளைந்தி லாதியோர் மூன்றுஞ் சொல்ல
நீதிகொண் டவனி யாளு நிருபன்றன் குமரர் கேட்டே
ஓதிய வர்த்த நாச முரைத்திடு பெரியோ யென்ன
வேதியன் சோம சன்மா விருப்புட னுரைக்க லுற்றான். (2)

எவ்வள வாகி லுந்தா னியற்றிய பொருள்கள் வந்து
கைவச மாகில் வேறோர் கருத்தினால் விடுக்க லாகா
எவ்வம்வந் தடையு முன்னோ ரிருங்கரா வுபாயத் தாலே
வவ்விய குரங்கை விட்டு மாழ்கிய கதைபோ லென்றான். (3)

## முதலை குரங்கை விட்டு நாணமடைந்த கதை

அக்கதை யேதென் றோத வாழிசூழ் கருங்க லாற்றின்
பக்கமோர் மரத்தின் மீது பழம்பறித் தருந்தி வாழும்
மர்க்கட வேந்தன் றன்பேர் வரும்பெலி வாத னன்னோன்
கைக்குளாம் பழத்தைத் தப்பி களகளென் றாற்றில் வீழ்த்த. (4)

மற்றுமோர் கொம்பிற் பாய்ந்து வளைத்தசைத் ததிர்க்கும் போழ்
உற்றிடு கனிக ளெல்லா முதிர்ந்தன களக ளென்ன [தில்
குற்றமில் விளையாட் டாகிக் கொழுந்தனிக் கொம்பு தன்னைப்
பற்றியே குதித்து திர்த்துப் பரிவுட னிருந்த தன்றே. (5)

இப்படி யிருக்கு நாளி லியாற்றினுக் கரச னாகச்
செப்பிடு முதலை வேந்தன் சிஞ்சுமா ரனுமங் கெய்தித்
துப்புறு கனியைத் துய்த்துச் சுவையின்மேல் விருப்பி னாலே
அப்புறம் போக மாட்டா தவ்விடத் திருந்து கொண்டே. (6)

வானர வரசன் றன்னை வன்கரா வரச னோக்கி
நானுனைப் பிரிய மாட்டே னன்பனே யென்ன வந்த
வானர வேந்தன் றானு மனமகிழ்ந் தினிய கூறித்
தேனுறு கனிய ளிக்கத் தின்றுகொண் டிருந்த தன்றே. (7)

இப்படி யனேக நாளங் கிருந்தனன் சிஞ்சு மாரன்
கற்புறு தேவி யந்தக் கசடன்மேன் மோகத் தாலே
வெப்புநோய் கொண்டு தூது விடுத்தன டூதி வந்து
செப்புநின் றேவி நோவு தீர்க்கநீ வருக வென்றாள். (8)

யூகவேந் தனைநாங் கூடி யுறவுகொண் டிருந்தோ மிந்நாள்
மோகமாய் நினது தேவி முயங்கிநோய் கொண்டா ளென்றாய்
போகவுங் காலெ ழாது பூவைதன் னோவுங் கேட்டோம்
சோகமு மிகுதி யானோந் தூதிநாஞ் செய்வ தென்னே. (9)

என்றனன் சிஞ்சு மார னிதையவ டானுங் கேட்டே
இன்றிவன் குரங்கை விட்டங் கெய்திலன் குரங்கைக் கொண்டு
சென்றுநாங் கொல்வோ மென்று குறித்துநின் றேவி வீழ்ந்த
அன்றுதொட் டின்று காறு மௌஷதங் கொடுத்தோ மந்நோய்.

தீரவு மில்லை யென்ன செய்குவோம் வான ரத்தின்
ஈரல்வந் தாலே யன்றி யிவளுயிர் பிழையா தென்றார்
பாரியை யிழந்த பேர்க்குப் பகர்குடிப் பேரு மில்லை
காரிய மதுவே நெஞ்சிற் கருதிநீ வருக வென்றாள். (11)

தூதிசொற் கேட்டு நெஞ்சந் துளங்கியே குரங்கி னீரல்
ஏதினி யதுவே யல்லா லிவனைநாம் வதைத்தோ மாகில்
பாதகந் தேவி செத்தாற் பழிவருங் குடியுங் கேடாம்
ஆதலாற் றேவி தானே யதிகமென் றிதயத் தெண்ணி. (12)

பயப்பய நடந்திம் மாற்றம் பகரவுங் கூசி நிற்க
வயப்படு தோழன் கண்டு வருகநின் கருத்தே தென்ன
வியப்புற நினது நட்பை மேவியே யனேக நாளா
நயப்புட னிருந்தேன் சற்றே நாடினன் றேவி தன்னை. (13)

என்னலும் போய்வா வென்றே யிசைத்தனன் யூக வேந்தன்
மன்னநின் றன்னை விட்டு வாழ்வதிங் கொருநா ளுண்டோ
என்னுட னீயும் வந்தா லேகியே வீடுங் காட்டி
உன்னுடன் வருவே னென்ன வுரைத்தனன் முதலை வேந்தன். ()

நீரினுண் மூழ்கிச் செல்லு நின்னைநான் கரைமேல் வந்து
சேருவ தெவ்வா றென்று செப்பும்வா னரத்தைச் சிஞ்சு
மாரனு முதுகி லேறி வருகவென் றுரைக்க நல்ல
காரியஞ் சொன்னா யென்று கடுகியே முதுகி லேற. (15)

கொண்டுபோய்த் தனது வீடு குறுகுமுன் கல்வி னூலே
மண்டுபொன் காண்பர் வாக்கான் மனிதரைக் காண்பர் தூர்த்த
மிண்டராற் சாது வான மேன்மையர் தம்மைக் காண்பர்
பெண்டுகண் மனத்தைக் காணப் பிறிதிலை யெனநி னைத்தே. (16)

இவனைநாங் கொல்லவென்றே யெண்ணினோந் தேவி செய்த
கவடமோ தூதி தானே கவடுசெய் தனளோ வென்று
மவுனமாய் நிற்க வந்த வானர நண்பா நெஞ்சில்
கவலையே தென்ன வொன்றுங் கவலையிங் கில்லை யென்ன. (17)

வீட்டினுண் மனையா ளுற்ற வேதனை யாதே னுந்தான்
கேட்டது முண்டோ வென்று கேட்கநா னேது சொல்வேன்
வாட்டிய நோவு கொண்டாள் வானர வீர லாலே
கூட்டிய மருந்து கொண்டாற் குற்றுயிர் பிழைக்கு மென்றாள். ()

வானர வீர லெங்கே வருநமக் கென்று மந்த
ஞானமொன் றல்லால் வேறு ஞானமொன் றில்லை யென்ன
வானர மறிந்து கொண்டு வானர வீர னூறு
தானமை யாதோ வென்று சாற்றிட முதலை வேந்தன். (19)

ஒன்றுதான் போது மென்றே யுரைத்திட வந்தோ வந்த
துன்றுநீண் மரத்தின் மீதே தூக்கியே யிருக்கக் கண்டும்
இன்றுநீ யெனக்குச் சொல்லா தித்தனை தூரம் வந்தாய்
சென்றுநா மெடுத்துக் கொண்டு திரும்புவோந் திரும்பென் றோத.

அல்லது வெறுங்கை யோடு மாமனைக் கேக லாமோ
நல்லது சொன்ன வீர னமக்குவேண் டியதுங் கொண்டு
சொல்லருங் கனியுங் கொண்டு தோழியைக் காண நாமும்
செல்லுவோம் வருக வென்னத் திரும்பினர் முதலை யாரும். (21)

விரைந்துபோய்க் குரங்கி னீரல் வேண்டுவ தெடுத்து வந்தால்
மருந்துமா மதனி யார்க்கு மற்றுள பேர்கட் கெல்லாம்
பொருந்திய கனிதன் னாலே போனக மமைக்க நல்ல
விருந்துமாஞ் செல்க வென்ன மெய்யெனச் சென்ற தன்றே. ()

மரத்தினை யடுக்கக் கொண்டு வந்துதான் விடுத்த லோடும்
சரத்தினும் விரைவிற் பாய்ந்து தருவின்மே லேறிக் கொண்டங்
கிருத்தலு முதலை யாரிங் கிருந்துவா னரத்தி னீரல்
குரக்கினுக் காசனே நீ கொண்டுவா வென்று கூற. (23)

இன்னமே னாசை வைத்திங் கிருந்தனை முதலை யேநீ
மன்னிய பசியா னட்பி னம்பிக்கை வைத்தாற் பாம்பால்
முன்னமோர் மண்டூ கந்தா னொளித்திடு முறைமை போலாம்
என்னலு மஃதென் னென்ன வியம்புவான் குரங்கு வேந்தன். ()

### தவளை பாம்பை வஞ்சித்த கதை

தன்னை மற்றைத் தவளைகள் வாட்டலால்
இன்ன லுற்றோர் தவளை யெழுந்தொரு
பன்ன கத்தைச் சினேகித்துப் பையுள்செய்
என்னி னத்தை விழுங்கென் றிசைத்ததே. (25)

நாகங் கேட்டுப் பன்னாளு மகிழ்ந்திரை
யாக வுண்ட ததன்பி னெனக்கிரை
ஈக வென்னத் தவளை யிலையென்ற
தாக நாக மழன்றுரை செய்யுமால். (26)

வந்து நீசொன்ன வார்த்தையி னெய்தினேன்
எந்த நாளு மிரையளி யாயெனில்
புந்தி யில்லோய் நினையும் புசிப்பலென்
றுந்தி யன்னதின் மக்களை யுண்டதே. (27)

தவளை யன்னது கண்டுதன் றாமோ
டிவளை வென்றற் கருந்துய ரெய்தியே
துவளு நெஞ்சொடு துண்ணென நீங்கியோர்
உவள கத்தை யடைந்தின்ப முற்றதே. (28)

மூன்ன மோர்நரி மோசம் புரிதலால்
மின்னு புத்தியில் லாவொரு வேசரி
துன்னு மாவி தொலைந்தது கேளெனுப்
பின்னு மோர்கதை பேசுங் குரங்கரோ. (29)

## கழுதை யிறந்த கதை

[வேறு]

துன்னிய காட்டொன் றங்கே துறைத்தனம் பண்ணுஞ் சிங்க
மன்னவன் வாயி லுக்கு மந்திரி யோரி யொன்றங்
கன்னவன் வயிற்றி னோவா யமைச்சனே கழுதை யீரல்
உன்னியே கொடுவா வென்ன வோரியோ ரூரை நாடி. (30)

சென்றொரு வண்ணான் றப்புஞ் செழும்புனற் சுனையின் பக்கம்
நின்றது பொதியைத் தள்ளி நெடுங்கயிற் றூலே காலை
ஒன்றிடத் தளைந்து வண்ணா னோட்டினன் கழுதை தன்னை
வென்றிகொ ளோரி சேர்ந்துன் மேனியே னிளைத்த தென்ன. ()

கூறவே கழுதை வண்ணான் கொண்டநாண் முதலெந் நேரம்
சீறியே யடித்த லானுந் தீனிபோ டாமை யானும்
ஏறியே பொதியு மென்மே லேற்றியே தள்ளிப் பின்னை
மாறுகால் பிணைத்த லானும் வருந்தினே னிளைத்தே னென்ன. (32)

அந்தவோ ரியுந்தான் கேட்டே யையநீ வந்தா யாகில்
சிந்தையுண் மகிழ்ந்தே யெங்கள் சிங்கமன் னவன்றன் பக்கல்
மந்திரி யாக வுன்னை வைத்தர சாள்வ னீயும்
சுந்தர வமைச்ச னாகிச் சுகத்துட னிருப்பா யென்ன. (33)

சிங்கமோ விலங்கை யெல்லாந் தின்னுமே யென்ன வோரி
எங்களை யெல்லாந் தான்வைத் திரக்ஷைசெய் திலனோ மன்னன்
வெங்களிற் றியானை யல்லால் வேறொரு விலங்கைத் தீண்டான்
அங்கவ னாணை தப்பா னதற்குநான் பிணையே யென்றான். (34)

கழுதையு நல்ல தென்னக் காலினிற் றளைத்தி ருந்த
பழுதையை யோரி மெள்ளப் பல்லினாற் கடித்து விட்டே
வழிசொலி யழைத்துப் போய்த்தன் மன்னவன் முனம்வி டுக்கப்
பழிபடு மன்னன் றானும் பற்றியே பிடிக்க வந்தான். (35)

கண்டது கழுதை தானுங் கதறியே திரும்பி யோட்டங்
கொண்டது சிங்க நோவு கொண்டதா லோட மாட்டா
தண்டையி னிற்க வோரி யையநீ பதறி விட்டாய்
கொண்டுநான் வந்துன் கையிற் கொடுத்தபின் வதைக்க வென்ன.

பின்னையு மோரி சென்று பேதையா யிருந்த யந்தோ
மன்னவ னுன்னைக் கண்ட மகிழ்ச்சியாற் றழுவி மோந்து
தன்னரு கிருத்திக் கொண்டு தானுனை யமைச்ச னாக்க
உன்னின னென்னு நீயே யோடியிங் குற்று யென்றும். (37)

கணக்கிலாப் பாவம் பண்ணிக் கழுதையாய்ப் பிறந்து வண்ணான்
பிணக்கினா லடியும் பட்டுப் பெருஞ்சுமை சுமந்தாய் நல்ல
இணக்கநான் செய்தே னந்த வினைக்கநீ யறியாய் மூட
குணத்தினாற் பயந்தா யென்றுங் கூறிடக் கழுதை கேட்டே. (38)

உன்னது பேச்சை நம்பி யுற்றனன் கிட்டு முன்னே
மன்னிய சிங்கங் கொல்ல வந்தது தப்பி வந்தேன்
இன்னமேன் வந்தா யென்ன விருகிலந் தொட்டுக் கையால்
தன்னிரு காது மூடிச் சத்தியஞ் சொல்லு மாபோல். (39)

ஐயையோ பாவம் பாவ மரசனப் படிசெய் வானோ
பொய்யுரை சொல்ல வேண்டாம் போடுநீ யிந்தப் பேச்சை
வையகம் போற்றுஞ் சிங்க மன்னவன் வார்த்தை தப்பான்
மெய்யிது தானே யென்று வேந்தன்மே லாணை யிட்டே. (40)

தன்னிலே வருஞ்செல் வத்தைத் தள்ளுவா ரொருவர்க் காணேன்
உன்னையே கண்டே னிப்போ துன்றலை விதியோ வென்றே
தன்னிலே யதிச யித்தே தானிதை விட்டு நீநான்
சொன்னதைக் கேட்டு வந்தாற் சுகமெலாம் வருமு னக்கே. (41)

இருவரா நாமே கூடி யிருந்தன மாகில் வேறங்
கொருவரா லாவ துண்டோ வுலகெலா நமதே யென்ன
வெருவிய கழுதை தானும் விரும்பியே யிதன்பின் செல்லக்
கருதிய வோரி யுஞ்சிங் கத்தின்முன் விட்ட தம்மா. (42)

கழுதையார் தம்மைச் சிங்கங் கண்டுதன் கைக ளாரத்
தழுவியே மோந்து கண்டந் தன்னையு முறித்துப் போட்டே
பழுதுநாஞ் செய்தோஞ் சந்தி பண்ணியிம் மருந்தைக் கொள்வோம்
கழுதையைப் பழுதி லாமற் காத்துநீ யிருப்பா யென்றே. (43)

ஓரியைக் காவல் வைத்தே யொருசுனை யருகிற் சென்று
பாரிய சிங்கஞ் சந்தி பண்ணியங் கிருக்கு முன்னே
ஓரியு மருந்தோ மென்றங் குற்றதன் கண்ணுங் காதும்
ஈரிரண் டுறுப்புந் தின்றே யிருந்தது பயந்து தூர. (44)

சிங்கமுஞ் சந்தி பண்ணிச் சென்றிதன் கண்க ளெங்கே
இங்கிதன் செவிக ளெங்கே யென்றுதான் முடுகிக் கேட்க
அங்கமெல் லாமுண் டாகி லகப்பட்டுந் திரும்பிப் போய்ப்பின்
மங்கிட விறக்க விங்கே வாரினைந் திடுமோ வென்ன. (45)

சிங்கமுங் கழுதை யீரற் றின்னவு மில்லை வீணே
அங்கொரு நரிதான் வஞ்சித் தழைத்துப்போய்க் கொல்லு வித்துத்
தங்குல வோரிக் கெல்லாந் தானிரை கொடுத்த தன்றே
புங்கமா யறிவி லாமற் பட்டது கழுதை தானே. (46)

அப்படி நீயு மென்னை யழைக்கிலுன் வார்த்தை கேட்டே
மெய்ப்பட வாறேன் வந்தால் விரைந்துநீ கொல்லு தற்குத்
தப்பிலை யிதுதா னிற்க தன்னுண்மை தன்னைச் சொல்லித்
தப்பறு குலாலன் கெட்ட கதையொன்று சொல்லக் கேளாய். ()

## குயவன் கதை

[வேறு]

உதிட்டிர னெனுமொரு குயவ னோர்சிறு
பதிக்கணே யுறைந்துமட் பாண்டஞ் செய்குவோன்
பிதிர்க்குமோ டொன்றுமுன் பீற லாலிள
மதிப்பிள வெனவடு வயங்கு நெற்றியான். (48)

கார்வளங் குன்றியே காணும் பஞ்சத்தால்
சீர்வள மொன்றுமோர் தேயத் தெய்தினான்
போர்வள மொன்றுமந் நாட்டின் பூபதி
வார்வள மொன்றிவன் வடுவைக் கண்டனன். (49)

கன்றிய போரின்முன் காயம் பட்டவன்
என்றுசே னாபதி தலைமை யீந்தனன்
வன்றிறல் வேந்தனோர் வைகல் யார்பொரு
தொன்றிய வாளின்வெட் டுரையென் றோதினான். (50)

இழித்திடு குயவன்யா னிதுவு மோவுறை
கழித்தவாள் வெட்டன்று கடத்தி னோடுமுன்
கிழித்ததென் றிடவுள நாணிக் கீழ்மையோய்
பழித்தல்செய் வாரெனைப் பாரின் வேந்தரே. (51)

தீதுறு நின்குலந் தெரிவ தற்குமுன்
போதுக வென்றிறை புகலப் போரினில்
யாதினு மெனைவெல் வாரில்லை யாதலால்
நீதி யன்றென்னை நீக்க லென்றனன். (52)

நின்குலம் போரினி னேர்வ தன்றுநீ
கொன்படு சிறுநரிக் குட்டி போற்றுளேல்
என்பய னென்னவக் கதையென் னென்னலும்
வன்புறு வேந்தனும் வகுத்துச் சொல்லுவான். (53)

## நரிக்குட்டிக் கதை

குட்டிக ளிரண்டுடைக் கொடிய கேசரி
பெட்டையை நோக்கியுன் பிள்ளை கட்குறைத்
தட்டற வீகுவன் றனிவி டாதுநீ
மட்டறு மன்பினால் வளர்த்தி யாலென்றே. (54)

உறுமுணை வலித்துவாழ் நாளி லோர்தினம்
சிறுநரிக் குட்டியைப் பற்றிச் சென்றிதைக்
கறியெனக் கொள்கவென் றளிப்பக் கண்டிது
பெறுமழ குடைத்தெனப் பெட்டை யெண்ணியே. (55)

குறியதங் குட்டிக ளோடுங் கூட்டியே
நறியவூ ணுணவினைத் தந்து நாடொறும்
பிறிவற வளர்த்திட வளர்ந்த பின்னோர்நாள்
அறிவுறு மூன்றுமங் கடவி புக்கவே. (56)

நண்ணியோர் கரிதனை நரியின் குட்டிதான்
கண்ணுற நோக்கியே யோடக் கண்டிடம்
அண்ணிமற் றிரண்டும்பின் னதனை நோக்கியே
ஒண்ணுமோ வோடுத லுனக்கென் றேசலும். (57)

நரிபெறு குட்டியும் வலியி னன்மிகப்
பெரியனென் றுறுகலாம் புரியப் பின்பிதைப்
பரிவொடு வளர்த்தபெண் சிங்கம் பார்த்திது
தெரிவிலா துரைத்தனை செய்தி கேளெனா. (58)

நீயொரு சம்புவின் குட்டி நின்னைநான்
மாய்விலென் குட்டிக ளொடும்வ ளர்த்தனன்
தீயநின் குலந்தனைத் தெரியி னென்மகார்
காய்வரென் றுரைத்தலுங் கடிதி னீங்கிற்றே. (59)

களிப்புற வேந்திதைக் கழறி நின்குலம்
வெளிப்படா முன்னர்நீ விரைந்து போகென
ஒளிப்பொடு குலாலனு மோடி னானென்ன
நளிப்புனன் முதலைதா னவின்ற தென்பவே (60)

சொன்னவம் முதலைக்குச் சமுக வானரம்
கன்னியர் கிருத்திர மத்தைக் காணரி
தென்னலும் யாதினா லிசைக்கின் றாயென
இன்னதா லென்றொரு கதையி சைக்குமால். (61)

## கணவனை வஞ்சித்த கதை

[வேறு]

மிக்கதா ராவனத்தின் மேவுஞ் சத்ய
விரதனும் பார்ப்பானுக் குரிய தேவி
தொக்கபெருஞ் சண்டையிட்டுக் குடும்பந் தன்னைத்
தூறுபுரி வாளவண்மே லாசை கொண்ட
தக்கபெரு வேதியனு மவண்மோ கத்தால்
சஞ்சாரஞ் செயநினைந்தோர் கானிற் சென்றான்
மைக்கணியு நடையாலும் வெய்யி லாலும்
வருந்திநீர் வேண்டுமென வாய்விண் டாளே. (62)

பேதைநீ யிங்கிருவென் றுரைத்துப் பார்ப்பான்
பெயர்ந்தனனீர் கொண்டுவரு முன்னே மாது
சாதலும்வின் வாணிநின்றன் வயதிற் பாதி
தருதியே லுய்வனெனச் சாற்றக் கேட்டே

ஈதலுமங் கவன்பிழைத்தே யேகும் போதோ
ரிசைபாடு மூடவனைக்கண் டிச்சை வைத்து
வேதியநீ தனிவிட்டுப் போம்போ தெல்லாம்
வெருவேனிம் மூடந்துணையாய் மேவி னென்றாள். (63)

இவள்கருத்தை யறியாவே தியனு நன்றென்
றிம்மூடவன் றனக்குஞ்சோ றீந்து வந்தான்
அவளொருநா டரவோரத் திளைப்பாய்த் தூங்கு
மந்தணனை யதனில்விழத் தள்ளி யிந்தப்
பவமூடவன் றனையெடுத்துக் கொண்டோர் நாட்டிற்
படர்ந்தனளந் நாட்டிறைவ னிவளைப் பார்த்துக்
கவலையில ளாய்மூடமாம் புருடன் றன்னைக்
காக்கின்றாள் கற்பின்மிக்கா ளெனவி யந்தான். (64)

நங்கையிவ ளெனமுறைகொண் டுடையுஞ் சோறுந்
தானளித்து வேந்திருக்க மறையோ னுய்ந்தே
அங்குவரல் கண்டவவ னிறையை நோக்கி
யவனெனது புருடனுக்குப் பகைஞ னென்ன
இங்கிவனைச் சிறையிடுமி னென்ன வேந்த
னியம்புதலு மறையவன்முன் னிகழ்ந்த தோதத்
திங்கணெடுங் குடைவேந்த னுண்மை தேர்ந்து
தெரிவைக்குத் தக்கதண்டஞ் செய்திட் டானே. (65)

## வேறு

அங்கவ்வே தியனைப் போக்கி யரசனு மிருந்தான் வஞ்ச
நங்கையர் தம்பேச் சுக்கு நற்செவி கொடுக்க லாகா
தங்கவர் சொற்குக் காது கொடுத்தா சனும மைச்சும்
பங்கமுற் றனர்க ளென்று பகர்ந்தனன் குரங்கு வேந்தன். (66)

மகளிர் சொற் கேட்டு மானமிழந்த கதை

முதலையக் கதையென் னென்ன முன்புநந் தனனென் வேந்தன்
இதமுறு மனையா ளோடே வெத்திறச் சமாதா னத்தும்
கிதைவில னாய்நீ வாயிற் றிகழ்கடி வாளங் கொண்டுன்
முதுகின்மே லெனையெ டுத்து முற்படக் கனைத்தா யானால். (67)

உன்னுரை தனக்குக் காது கொடுப்பனென் றோத வப்போ
தன்னவ னவண்மோ கத்தா லப்படி செய்யக் கேட்டுத்
தன்னிக ரமைச்ச னில்லும் பிணங்கிநீ தலைம யிர்த்துப்
பின்னிடம் வலஞ்செய் தென்னைப் பெரிதுறப் பெட்டு மைந்தும்.

பரிவுட னிலத்திற் றோயப் பணிவையே னுனக்கென் னின்பம்
தருவனென் றிட்வ மைச்சன் சாற்றிய வண்ணஞ் செய்தான்
வரருசி யென்னு மன்னோன் மறுதினஞ் சபையி னெய்த
அரசனீ ழுண்டி யாயிங் கடுத்ததென் னென்று கேட்டான். (69)

மந்திரி யரச னேநீர் வாசிபோற் கனைத்த லாலே
இந்தமுன் டிதமெ னக்கு மெய்திய தென்று கூற
அந்தநற் சபையி லுள்ளார் யாருமிவ் வாறு தேர்ந்து
புந்தியு ணகைகொண் டார்கள் புரவல ஞணங் கொண்டான் (70)

மாதர்க ளோடேனை வீணாய்ப் பேசினு மருவும் பாவம்
ஆதலா லில்லாட் காநீ யடுத்தெதனைக் கொலைநி னைத்தாய்
தீதது வென்னும் போது செத்தனண் மனைவி யென்று
கோதறு வண்மீ னென்று குறுகினின் றுரைத்த தன்றே. (71)

குன்பிரி வாலி றந்தா டாரமென் றுரைக்கக் கேட்ட
வன்கராக் குரங்கைப் பார்த்து வானர வேந்தே நானும்
புன்மையே ஞத லாலே பொல்லாங்கு மடைந்தே னுன்னை
இன்மைசெய் திடநி னைத்தே யிஷ்டனல் லேனு மானேன். (72)

என்றிடக் குரங்கு சொல்லு மெனைக்கொல நினைக்குச் சொன்ன
துன்றுநின் மனைவி துட்டை யாதலாற் றுயரங் கொள்ளேல்
அன்றெனிற் பிறர்க்கு டம்பட் டிருந்தவோ ரரிவை தன்னை
நன்றுமு னரிசி ரித்த நற்கதை போலா மென்ன. (73)

### நரி சிரித்த கதை

சம்புதா னெவளைப் பார்த்துத் தானகைத் திட்டதென்ன
சம்பகா வதியென் றோதுந் தக்கசீர்ப் பட்ட ணத்தில்
சம்பமில் கிழவன் றேவ தத்தனுஞ் சாவ காரி
சம்பகக் குழலி யன்னான் றாரஞ்சோ ரஞ்செய் வாளே. (74)

பெண்டிழுந் திடுமோர் தூர்த்தன் பெரிதுந்தன் னிடத்தி னேசங்
கொண்டதை யறிந்தாள் வீட்டிற் கொட்டிவைத் திருந்த பொன்னைக்
கண்டெடுத் தவனைத் தேயங் காணவே யழைத்துக் கொண்டு
வண்டிமிர் குழலாள் சென்றாள் வழியிலோ ராறு கண்டார். (75)

பொருளைமாத் திரந்தான் கொண்டு போகவே யவனி னைத்தே
அரிவைநீ கட்டிக் கொண்ட வாடைமுன் றனை வெல்லாம்
வெருவுறு தளிப்பை யாகின் மிகுந்தநீ ராற்றைத் தாண்டி
மருவவைத் திட்டு நின்னை வந்துபின் னழைத்துப் போவேன். (76)

என்னவப் படிசெய் யென்றா ளெடுத்துக்கொண் டோடிப் போ [னான்
பின்னவ ளணைத் தாலே பெரிதுரை யமிழ்ந்து நீரில்
மன்னிநின் றனளப் போதோர் வனநரி யிறைச்சி தன்னை
அந்நதி யருகே வைத்தங் கடுத்தமீன் றன்னைக் கௌவ. (77)

மீனமுந் தப்பிற் றந்த விறைச்சியை மேவி யோர்புள்
தானெடுத் தாகா யத்திற் பறந்தது சம்பு கந்தான்
வானினைப் பார்க்க மங்கை வானைப்பார்த் தாவ தென்ன
ஈனமி னரியா ரேயென் றிசைக்கவந் நரிதான் பார்த்தே. (78)

சோரனை நம்பி யேங்கின் கணவனைத் துறந்த தேபோல்
நாரியே யெனக்கும் வந்த தென்றது நகைப்ப வில்வா
ரூருமிங் கிவர்கள் வாக்கு வாதஞ்செய் துறுங்கால் சாவு
காரியு மறிந்து மாதைக் கண்டித்துத் தள்ளி விட்டான். (79)

ஆகையா லில்லாள் சாகைக் கல்லனீ யுரும லுன்றன்
சாகைசே ரெனக்க ராவுந் தன்னிடஞ் சென்று பார்க்க
வாகைசேர் முதலை யொன்று மருவிடப் பார்த்து மீண்டே
ஓகைசேர் குரங்கே யானு முறைவிடந் தனக்குச் சென்றேன். ()

வன்மைசெய் முதலை யொன்று வந்ததி லிருந்த தையா
இன்மை செய் ததனைத் தள்ள வியம்புவா யுபாய மென்ன
நன்மைசெய் சுமுகன் சொல்லு நன்றியைக் கொன்ற பாவி
புன்மைசெய் மூட னுக்குப் போதித்தா லன்ன வன்றான். (81)

## குரங்கு குருவிக்கூண்டைக் கலைத்த கதை

வீடுடை யவனை வீட்டை யிழந்திடச் செய்வா னென்ன
காடுறு முதலை யந்த நற்கதை யுரைப்பா யென்ன
நீடுறு குரங்கு சொல்லு நெடியதோர் பழும ரத்தில்
கூடுகொண் டனவி ரண்டு தூக்கணங் குருவி தாமே. (82)

குளிரினு னடுங்கி வானக் கொடுமழை யான தனைந்து
களிர்சுரத் தோடு தேக நடுங்கியே பற்கள் கிட்டி
வளமறு குரங்கொன் றங்கு வந்தது குருவி பார்த்தே
இளகிய மனத்தி னாலே யின்சொலா லொன்று சொல்லும் (83)

கைகள்கா லிருந்து மிந்தக் கன்மத்தை யனுப விக்குஞ்
செய்தியே னென்ன வூசி மூஞ்சிகொள் சிறிய மூடா
வைதுநீ புத்தி சொல்ல வல்லையோ வெனக்கோ பித்து
செய்திடு மதன்றன் கூட்டை நெடுங்கையாற் பிய்த்த தன்றே. (84)

ஆதலாற் கீழா னோர்கட் காருப தேசித் தாலும்
தீதுறு மென்று சொல்லச் சிஞ்சுமா ரனுமு ரைக்கும்
கோதுடை யேனா னேனுங் கூறுவா யொரு பாயம்
நீதியோ வென்னச் சொல்லு நெடியவா னரத்தின் வேந்தே. (85)

நின்பகை யொடுபோர் செய்து நீயிறந் திடிற்சு வர்க்கம்
பின்பவன் பொருதி றந்தாற் பெரிதுநின் னிடங்கி டைக்கும்
முன்பொரு புத்தி சாலி முறைமையி னிரு பேர்க்கும்
இன்பொடு செய்தாற் போல வியற்றிட வேண்டு மென்றான். (86)

## நரி நால்வர்க்கும் நான்குபாயஞ் செய்த கதை

[வேறு]

இறந்த யானையைத் தின்னவோ ரிகலனங் கெய்தச்
சிறந்த சிங்கமொன் றடைந்துநீ யாரெனச் சிறியேன்
மறங்கொ ணீகொன்ற யானையைக் காத்திங்கு வதிந்தேன்
அறந்த வாச்சிங்க வரசனே யென்றதந் நரியே. (87)

ஈது நான்கொன்ற தன்றுநீ கொள்கவென் றிசைத்துப்
போத மற்றொரு புலிவந்து யாரென நரியார்
மாது லாவிதை மடித்தகே சரியொன் றங்குளதால்
ஓது வேங்கையிங் குறிலெனக் குரையென வொளித்தே. (88)

என்ன காரண மதற்கெனில் வேங்கையொன் றெய்தி
முன்னோர் யானையைக் கொன்றுதான் மூழ்கப்போங் காலைத்
துன்னி யெச்சிலாக் கியதெனச் சொல்லலும் வேங்கை
பின்ன ரெண்ணியே மருமக னேநின்றாற் பிழைத்தேன். (89)

என்று சொல்லிமுன் னோடிய இதன்பினோர் குரங்கு
அன்ற நோக்கியிக் கரியினைத் துண்ணெனக் கிழித்துத்
தின்று போவெனக் குரங்கதைக் கிழித்தது சிங்கம்
ஒன்று வந்ததென் றுரைத்திட நடுங்கியோ டியதே. (90)

பக்கு வஞ்செய்து குரங்குபோ தலுநரி பார்த்துத்
தக்க தென்றுணைப் போம்பொழு தொருநரி சார்ந்து
கைக்கொ ளற்கெனை வதையடித் தோட்டியே கடிதில்
தொக்க வெம்பசி தொலைந்திட வுண்டது நெடுநாள். (91)

சாம பேதநற் றானதண் டஞ்செய்த சம்பு
தீமை நீங்கிய தென்னநின் பகைவர்க்குச் செய்து
நீமு யங்கிடத் திருந்திடு வேறிட நிற்கில்
நாம வெந்துயர் நணுகுமென் றிசைத்தது குரங்கு. (92)

### நாயைக் கடித்த கதை

சிஞ்சு மாரனும் யாதிலை லதுதெரித் திடுகென்
றஞ்சி யோதலு மயோத்தியி லிருக்குமோர் சுணங்கன்
பஞ்ச மெய்தலால் வேறொரு தேசத்திற் படர்ந்து
துஞ்சி னீங்கியோர் மாதுதான் சோறிட விருந்தே. (93)

சிறிது நாட்சென்ற பின்பந்தத் திருமனை விடுத்து
மறுகி னுற்றிட மற்றைநா யாவுமேல் விழுந்தே
இறுதி வந்தெனக் கடித்தலு மெழுந்தலை தோடி
மறுவி லாததன் னகரிடை நொடியில்வந் ததுவே. (94)

வந்த பின்னரவ் வூரிடை மருவிய நாய்கள்
அந்தத் தேயநற் றேயமோ வெனவகல் புவியுள
எந்தத் தேயத்து நல்லதத் தேயநம் மினத்தில்
பந்த வொற்றுமை யின்மையாற் பலித்ததிவ் விடமே. (95)

ஆத லாற்றன திடத்தினி லமர்ந்திட லினிதாம்
நீதி யாலந்த முதலையை நீவெற்றி கொள்வாய்
போதி யென்றலு முதலையும் போய்ப்பொரு ததனை
மீதல் செய்துதன் னிடத்தினின் மேவிவாழ்ந் ததுவே. (96)

நான்காவது தந்திரம்

அர்த்தநாசம் முற்றிற்று.

## ஐந்தாவது தந்திரம்

# அசம்பிரேட்சியகாரித்வம்

(காரியத்தைத் தேற விசாரியாமற் செய்தல்)

**[Acting without due consideration]**

சுருதியந் தத்து முண்மை தோற்றிடத் தோற்று மன்பர்
உருகுநெஞ் சத்து மென்று முவந்தபே ரொளியைப் போற்றி
மருவிய பஞ்ச தந்த்ர வகையின்முன் னான்கு சொன்னோம்
கருதரு மசம்பி ரேட்சிய காரித்வஞ் சொல்லு வோமே. (1)

ஐவகைத் தந்தி ரத்தி லாதியோ ரைந்து மந்த
மெய்வகை மறையோன் சொல்ல வேந்தனார் மைந்த ரோர்ந்தே
செய்வகை யுபாய மாந்தந் திரமெலாந் தெளிந்தோ மையா
கைவரு மசம்பி ரேட்சிய காரித்வஞ் சொல்லு கென்றார். (2)

அரசனார் குமரர் கேட்க யாதொரு கரும மேனும்
திரமொடு விசாரி யாமற் செய்யவொண் ணாது செய்தால்
வரமிகு கீரி தன்னை வளர்த்ததைக் கொன்று பின்னர்
தரணியின் மறையோன் வீழ்ந்து தவித்தது போலா மென்றான். ()

### கீரிப்பிள்ளை கதை

அன்னவக் கதையே தென்றா ரெழில்பெறு கௌட தேச
மன்னவன் றனக்கு நித்தம் வந்துபஞ் சாங்கஞ் சொல்வோன்
தன்னது தேவி கர்ப்பந் தரித்தில ளதனாற் கர்ப்பம்
என்னவோர் கீரி தன்னை யெடுத்தவர் வளர்த்தார் மன்னோ. (4)

புத்திர வாஞ்சை யாலே புல்குவன் மடிமேல் வைப்பன்
முத்தமு மிட்டுக் கொள்வன் முந்தியே பாலுஞ் சோறும்
துய்த்திட வளிப்பன் மார்பிற் றூங்கவும் படுத்திக் கொள்வன்
மெத்தவுங் களித்து நெஞ்சில் விருப்புடன் வளர்த்த பின்னர். (5)

மனையவள் யாக சேனி வயிற்றினிற் கருப்பங் கண்டே
னைவளர் குவளை யுண்கட் டோகைநல் லாளே நீயோர்
தனையனைப் பெறுவா யென்றான் சதுமறைத் தலைவ னாகி
தினையுநங் குலமுங் காப்ப னிதியமும் படைத்து வாழ்வன். (6)

யதொரு நூறி ருப்பன் மன்னவன் சித்த மெச்ச
யபுரோ கிதமுஞ் சொல்லி நலங்களும் பெறுவ னென்றே
தயவொடு தேவ சன்மா சாற்றலுந் தேவி யான
தயனெடுங் கண்ணா ளென்ன காரியஞ் சொன்னா யன்றே. (7)

காணுமுன் கேட்கு முன்னே காரியங் களைநி னைந்து
வீணிலே பூமி யின்மேல் விழுந்துருண் டழுது நெஞ்சம்
நாணினன் பிரம சாரி நாடிலங் கதுபோ னீயும்
பூணணி மார்ப வீணே புகலவொண் ணாதென் றானே. (8)

## பொரிமாத் தோண்டியை யுடைத்த கதை

உரைத்தவக் கதையே தென்ன வோதுமோர் நகரந் தன்னில்
தரித்திர பிரம சாரி சார்ந்தொரு சிராத்தத் துண்டான் [தான்
இரைத்திடும் பொரிமாத் தோண்டி யவற்கொரு மறையோ னீந்
திருத்தியிற் பருப்புஞ் சோறுந் தின்றதோர் மயக்கத் தாலே. (9)

மற்றொரு நகர்க்குச் செல்லும் வழியிலோர் மணற்ற டத்தில்
சற்றொரு கணைப்போ தங்கே தரித்தவ னிருந்து நெஞ்சில்
ஊற்றகா ரியங்கள் கோடி யுன்னின னிந்த மாவை
விற்றுநா மாடு வாங்கி மேய்க்கிலோ ரிரண்டு குட்டி. (10)

போடுமவ் விரண்டி லொன்று பொலிகடாத் தன்னை விற்று
நாடுபெண் ணாடி ரண்டு நயவிலை யாகக் கொள்வேம்
ஆடொரு நாலா மந்த வாடுக ளிரண்டி ரண்டாப்
போடுமக் குட்டி யோடே பொருந்திய பனிரண் டாமே. (11)

பன்னிரண் டாடும் விற்றுப் பசுக்களோ ரிரண்டு கொள்வோம்
தன்னிலே பட்டி மேய்ந்து தருக்கியே யிரண்டு மீனும்
மன்னுபா னெய்யும் விற்று மற்றிரு பசுவுங் கொள்வோம்
அன்னவப் பசுக்க ளாறு மாறுசேங் கன்று நல்கும். (12)

மூவிணை யேருங் கூட்டி முன்னுள நிலங்க ளெல்லாம்
ஓவற வளங்க ளாக வுழுதுநாம் பயிர்க ளிட்டே
மேவுதா னியங்க ளெல்லாம் விலைகளைக் குறைய விற்றுக்
காவல னறிக்கை யாலே கனக்கவோர் வீடு கட்டி. (13)

இருந்துநாம் பணமுங் காசு மேலொடு பொருளுந் தேடிப்
பொருந்திய பிராம ணர்க்குப் போசன மிடுவோ மிட்டால்
வருந்தியே நமக்குப் பெண்ணும் வலியவே தருவா ரந்தத்
திருந்திழை யாளு நாமுஞ் செருக்கியங் கிருக்கு நாளில். (14)

மாரனு மிரதி தானு மருவிய வாறு நாமும்
சேருவோஞ் சேர்ந்து நல்ல சேயையும் பெற்றெ டுத்துப்
பேருறு சோம சன்மா வென்றுபே ரிட்டவ் வூரில்
காரகஸ் தனுமாய் வாழ்வு கனம்பெற விருப்போ மென்றும். (15)

அப்படி யிருக்கு நாளி லந்தியிற் பசுக்கள் கட்டக்
கொப்படர் கண்ணாள் செல்லக் குழந்தையு மழுகா மோடி
இப்படி யடிப்போ மங்கே யென்றொரு தடியெ டுத்துச்
செப்பிய பொரிமாத் தோண்டி சிதறிட வடித்திட் டானே. (16)

கலங்கினன் பிரம சாரி காரக ஸ்தங்க ளெல்லாம்
துலங்கிய பொரிமா வைத்த தோண்டியோ டழிந்த தன்றே
மலங்குகண் ணீர்கள் சோர வயிற்றினி லடித்துக் கொண்டே
நிலந்தனிற் புரண்டு வீழ்ந்து நெகிழ்ந்துய ரலைந்தா னன்றே. (17)

## ௸ கீரிப்பிள்ளையைக் கொன்ற கதை

ஆதலாற் காணு முன்னே யகத்தினு ளினைக்கொ ளுதென்
றோதிய யாக சேனி யுடனவ னிருக்கு நாளில்
தீதிலா முகூர்த்தந் தன்னிற் செல்வனும் பிறந்தா னந்தச்
சூதகங் கழிக்கு நாளோர் சுனையினின் மூழ்கப் போனாள். (18)

ஆயிழை போகை யாலே யாரண முழுதும் வல்லோன்
சேயினைக் காத்தி ருந்தான் சிராத்தமென் றரசன் றூதர்
நீயவண் வருக வென்றார் நேரமுஞ் சென்று போனால்
போயதை யெல்லாம் வேறு புரோகிதர் கொண்டு போவார். (19)

என்றுதன் மனத்தி லெண்ணி யின்பமா வளர்த்த கீரி
தன்றுணை யாக வந்தத் தனையனை வைத்து நீங்கிச்
சென்றன னரசன் வீட்டிற் சிராத்தமு முடித்துப் பெற்ற
பொன்றுகி லரிசி யெல்லாம் பொதிகளி லேற்றிக் கொண்டே. ()

வருமுனே சேயைக் கிட்டி வந்ததோர் நாக மந்தக்
கரியநா கத்தைக் கீரி கடித்திரு துண்ட மாக்கிக்
குருதி வாயெங்கு மாகக் கொண்டுசந் தோஷங் காட்ட
அருமறை யோன்முன் சென்ற தாகெடுத் தாயோ வென்றே. ()

துண்டினா லடித்துக் கொன்றான் றளர்வொடு வீட்டில் வந்தான்
கண்டனன் பிள்ளை முன்னே கரியபாம் போவி ரண்டு
துண்டமாக் கடிக்கப் பட்டுத் தூரவே கிடக்கக் கண்டான்
மண்டிய துயர மாகி வயிற்றினி லடித்துக் கொண்டான். (22)

வாயிலு மடித்துக் கொண்டான் மண்ணையும் போட்டுக் கொண்
சேயிலு மதிக மான சேயைநான் கொன்றே னென்றான் [டான்
நீயெனக் கெதிரே வந்து நின்றெனைக் கெடுத்தா யென்று
போயதன் மேல்வி ழுந்து புரண்டுருண் டாற்றி னானே. (23)

தேவியு மூழ்கி வந்தாள் தேவசன் மாவை நோக்கிப்
பாவியிங் கேது கீரிப் பாலக னிறந்த தென்றே
கூவென வலறி நின்று றுற்றவா றவனுஞ் சொன்னான்
காவியங் கண்ணி தானுங் கனலிடு மெழுகொத் தாளே. (24)

## நாவித னிறந்த கதை

ஐயையோ விசாரி யாம லருங்கொலை வந்த தேதாம்
செய்யுமா றென்ன வென்றே தேவசன் மாலை நோக்கிக்
கையற விசாரி யாமற் கண்டது கொண்ட டித்து
நையவே யிறந்து போன நாவிதன் கதைபோ லென்றான். (25)

நாவிதன் கதையே தென்ன நகரமொன் றதிலோர் செட்டித்
தேவிதான் பிள்ளை பெற்றா ளயனாண் மூகூர்த்தத் தாலே
சாவர்தாய் தந்தை யிற்செய் தரித்திர னாகிப் பின்பு
மேவுநன் செல்வ மென்று விளம்பினர் கணித நூலோர். (26)

பயந்துதான் வணிக னந்தப் பாலனை யெறிந்து போட்டான்
அயர்ந்தவன் றேவி மூர்ச்சை யாகியே வீழ்ந்தி றந்தாள்
நயந்தருந் தேவி போனா ளமக்கினி வாழ்வே தென்று
சயந்தரு வணிக னாவி தானாகப் போக்கிக் கொண்டான். (27)

இப்படி யிவர்கள் செத்தா ரிவையெலா மரசன் கேட்டே
தப்பற வணிக னீட்டுந் தனமெலா மெடுத்துப் போனான்
முப்பழி யாமோ வென்று முதியளோர் நாவி யந்தக்
குப்பையி லெறிந்து போட்ட குழவியை யெடுத்துப் பார்த்தாள். ()

இழைத்தநாள் வாராமையாலே யெத்தனை சிறுமைப் பட்டும்
பிழைத்தது கிடக்க வந்தப் பிள்ளையை யெடுத்துப் போய்த்தான்
உழைத்ததன் கூலி யாலே யொருத்தியை முலைகொ டுக்க
அழைத்தவந் தவண்மு லைப்பா லருந்துவித் தவள்வ ளர்த்தாள். ()

வளர்ந்தனன் செட்டி பாலன் வயதொரு பதினா றாயும்
இளந்தலைப் பட்டுக் கொண்டே யிருந்தனன் றரித்தி ரத்தால்
உளந்தடு மாறி யோர்நா ளுறங்கிய நாளி லாங்கோர்
வளந்தரு சித்தன் வந்து வருந்தநீ வேண்டா மென்றே. (30)

விடியுமுன் னெழுந்தி ருந்து வீடெலாஞ் சுத்தி பண்ணி
முடிமயி ரிறக்கிக் கொண்டு மூழ்கிவெண் ணீறு பூசித்
தடியுமொன் றெடுத்துக் கொண்டு தன்மனை முன்றி றன்னில்
கடிகைமூ வைந்து மட்டுங் காத்துநீ யிருக்கி லாங்கே. (31)

மதியமாம் வேளை தன்னில் வருவர்பி க்ஷைக்கு மூவர்
பதறிநீ யெழுந்தி ருந்து பார்த்துநீ யவரை மூளை
சிதறிட வடித்தா லந்தச் சித்தர்கண் மூவர் மூன்று
நிதிகளா யிருந்து நெஞ்சி னினைத்தது தருவா ரென்றான். (32)

விழித்தன னவனைக் காணான் வீடெலாஞ் சுத்தி பண்ணி
அழைத்துநா விதன்கை யாலே யவன்பணி கொண்டு மூழ்கிக்
குழைத்துவெண் ணீறு பூசிக் கூறிய நேர மட்டாக்
கழைத்தடி கையிற் கொண்டு காத்தவ னிருந்தான் மன்னே. (33)

அப்படி தானே மூவ ரந்தவே ளையினில் வந்தார்
கொப்பெனத் தடியி னாலே கொண்டிவ னடித்த போதில்
தப்பற வவரு மங்கே தமனிய மாகக் கண்டான்
செப்பிய வாறெ டுத்துத் திருமனை தனில்வைத் தானே. (34)

கண்டன னாவி தன்றான் கருதியவ் வாறு தானும்
மூண்டித னாகி வந்த மூவரைத் தடியான் மோத
விண்டுயி ரிறந்தா ரந்த வேளையிற் காவ லாளர்
கண்டன ரவனை யையோ கழுவினிற் போட்டு விட்டார். (35)

தீரவே விசாரி யாமற் செய்யுமோர் கருமத் தாலே
பாரிய மனைவி யாதி பற்றிடு முயிர்க்குங் கேடாம்
காரியந் தப்பி னாலுங் கருதியோர் குறிப்பி னாலே
தேருவார்க் கின்ப மெய்துஞ் செட்டியார் கதைபோ லென்றான்.

## செட்டி கதை

செட்டியார் கதையே தென்னத் திருந்துமோர் பட்ட ணத்தில்
மட்டிலாச் செல்வ னான வணிகனுங் குபேர தத்தன்
கட்டழ குடைய தேவி காமசஞ் சீவி யந்த
மட்டுலாங் குழலா ளீன்ற மைந்தனு மனங்க மித்ரன். (37)

தேவியும் வணிகன் றானுஞ் சேயொடு செருக்கி வாழ்ந்து
மேவியங் கிருக்கு நாளில் விரிகடற் கப்ப லேறிப்
போவது கரும மாகப் புந்தியில் வணிக னெண்ணிக்
காவியங் கண்ணி நீயுன் கற்பினை விடாதே யென்றும். (38)

சேயினை யபூர்வ வஸ்து சேர்ந்திடில் விடாதே செம்பொன்
ஆயிரங் கழஞ்சா னாலு மளித்ததைக் கொள்வா யென்றும்
போயினன் கப்ப லேறிப் புகலினுற் றிசைபு ரண்டோர்
மாயிருந் தீவு சேர்ந்து வாணிபஞ் செய்தி ருந்தான். (39)

அங்கவன் மீண்டு செல்ல வநேகநாள் சென்ற தந்தப்
பைங்கொடி யீன்ற பாலன் படித்தனன் கலைக ளெல்லாம்
இங்கிது நிற்க வேறோ ரெழினக ரத்தில் வாழும்
துங்கமா மறையோ னான சோமசன் மாவென் பானும். (40)

ஓதினன் கலைக ளெல்லா முலகெலாம் புகழ நித்தம்
தாதையிங் கிவனைச் சீறத் தாய்தனை நோக்கி யானும்
போதுவன் பரதே சத்திற் புகலுநின் கணவற் கென்றே [டான்.
கோதமாய்ச் சொன்னான் பின்னுங் கொடுங்கொழி னினைந்துமீண்

இவனைநாங் கொல்வோ மென்றேயெண்ணியோர்கல்லைக்கொண்டு
கவடமாய்ப் பரணி லேறிக் காந்தனன் றாயுங் காணாள்
தவளநூன் மார்பன் வந்து தனயனுண் டனோ வென்றான்
அவனைநா மெங்கே காண்போ மவன்பர தேசம் போனான். (42)

என்னவே கலங்கி மைந்த னேதிறற் போனா னென்று
தன்னிரு கண்ணீர் வாரச் சதுமறை யோனுங் கேட்டான்
அன்னவ ளழுது கொண்டே யருங்கலை கற்ற பிள்ளை
தன்னையெந் நேரஞ் சீறுந் தன்மையாற் போனா னென்றாள். (43)

பேதையே நாம்பு கழ்ந்தாற் பிள்ளை தான் செருக்க டைந்து
போதனை மறப்பா னென்று புத்தியே சொன்னே னென்றான்
பாதக நினைந்தோ மென்று பரணினு மிரங்கி வந்து
தாதைபா தத்தில் வீழ்ந்தான் றனையனைத் தழுவிக் கொண்டான்.

மைந்தனு மையா வுன்னை வதைத்திட நினைந்த பாவம்
எந்தமா தவத்தி னீங்கு மெனக்கருள் செய்வா யென்ன
அந்தண னீபோய் நின்வேட் டகத்திலே சிலநா ளுற்றால்
சிந்தையி னினைந்த பாவந் தீருநீ செல்க வென்றான். (45)

ஏகினான் சோம சன்மா வெதிர்கொடு வந்தா ரந்த
மாகவே தியர்க ளெங்கண் மாப்பிளை வந்தா னென்றே
பாகுபால் பருப்பு நெய்தேன் பாயசம் பணியா ரங்கள்
ஓகையாய் விருந்து செய்தா ருண்டுகொண் டவனி ருந்தான். (46)

தினமொரு நீதிப் பாட்டுச் சீட்டினி லெழுதிக் கட்டித்
தனதுமஞ் சத்தின் மேலே தலையணைக் கீழே வைத்தான்
பினைவா வாவெ றுத்துப் பேசினா னொருநா ளன்னோன்
மனைவியை யழைத்து நீதான் வருக்கவொண் ணாதோ வென்றார்.

என்னநான் சொல்ல வென்று ளிப்படி நீரி ருந்தால்
பொன்னிலை செலவுக் கென்று புகலுநீ யெனச்சொன் னார்கள்
மின்னுமவ் வாறே சொன்னாள் வேதியன் சீட்டி லொன்றை
அன்னவள் கையி லீந்தி தாயிரம் பொன்னென் றுனல். (48)

தையலுஞ் சீட்டை வாங்கித் தமையனார் கையி லீந்தே
மெய்விலை யாயி ரம்பொன் விற்றுநீ வருக வென்றாள்
கையிலே வாங்கி மிக்கக் கவிதையை வாசித் தந்த
ஐயனீ தாயி ரம்பொன் னதிகமே பெறுங்கா ணென்று. (49)

போயினன் பட்ட ணத்திற் புகுந்தனன் சீட்டைக் காட்டி
ஆயிரம் பொன்னீ தென்று னவரவர் வாங்கிப் பார்த்துப்
பேயபோ வென்றார் கொண்டு பின்னுமோர் தெருவி னிற்றன்
வாயிலில் வரும்போ தந்த வணிகனார் மைந்தன் கண்டான். (50)

சீட்டிது விலைசொல் லென்றான் செம்பொனு யிரமா மீது
தாட்டிகர் கொள்வ ரென்றான் றனவை யெண்ணி நல்கிச்
சீட்டினை வாங்கிக் கொண்டோர் செய்யப்பட் டாலே சூழ்ந்து
வீட்டிலே தூங்கு மஞ்ச மேலுறத் தூக்கி வைத்தான். (51)

செட்டியு மீரைந் தாண்டு சென்றபின் றிரும்பி வந்து
பட்டணக் கரைகண் டோடிப் பாய்களு மிறக்கி நாவாய்
விட்டொரு படகி லேறி வீட்டினிற் கருமம் பார்க்க
ஒட்டியே பாதி யல்லி லொளித்துவந் தகத்திற் புக்கான். (52)

அன்னையுந் தானுங் கூடி யருந்தியோர் தூங்கு மஞ்சந்
தன்னிலே யுறங்கக் கண்டு தானிவன் சோர னென்று
மின்னும்வா ளுரைக ழித்து வெட்டவே செல்லும் போது
மன்னிய சீட்டுத் தொங்க மற்றிதே தென்று பார்த்தான். (53)

பட்டினாற் சூழ்ந்து கட்டிப் பாதுகாப் புற்ற சீட்டை
விட்டுவா சித்தா னென்றும் விசாரியா மற்செய் தோர்கள்
கெட்டுமாய்ந் திடுவர் பின்னுங் கேடற விசாரித் தோர்கள்
மட்டிலாச் செல்வம் பெற்று வாழ்வரொன் றிருந்த தன்றே. (54)

சீட்டினை மெல்ல வைத்துச் செறியிருள் விடிந்த பின்பு
வீட்டினில் வந்தா னந்த மென்கொடி பணிந்து நின்றாள்
நாட்டிக மைந்தன் றானுந் தாளினில் வீழ்ந்தான் றன்பெண்
டாட்டியை யிவனா ரென்றா னனங்கமித் திரனா மென்றாள். (55)

புல்லினன் மோந்து கொண்டான் புதல்வனை யருகி ருத்தி
மெல்லிய றன்னை நோக்கி விளைந்தவா றுரைத்தே யிந்த
நல்லசீட் டாற்பி ழைத்தா னம்பியென் றவனை நோக்கிச்
சொல்லிதே தென்று கேட்டான் சொல்லுவா னிகழ்ந்த வண்ணம்.

நீயெனக் குரைத்துப் போன நீதியை நினைந்து கொண்டே
ஆயிரஞ் செம்பொ னீந்தே யையநான் கொண்டே னென்றான்
சேயினைத் தழுவிக் கொண்டு செம்பொனோர் கோடி யன்றோ
நீயெனக் கென்று கூறி நேசமாய் வாழ்ந்தி ருந்தான். (57)

கண்ணினிற் காணா முன்னங் கருத்தினில் விசாரி யாமல்
பண்ணுமோர் கருமத் தாலே பாவமும் பழியும் வந்து
நண்ணிடு முயிர்க்குங் கேடா நலமுடன் றெளிந்து செய்தால்
புண்ணிய கீர்த்தி மிக்க பொருளும்வந் தெய்து மென்றாள். (58)

பின்னும்வே தியனை நோக்கிப் பேசுவாள் யாக சேனி
மன்னுமென் கருப்பங் கண்டு மகிழ்ந்துநீ யுரைத்த வெல்லாம்
நன்னெறி யல்ல வீணாய் நகைக்கிட மாகு மென்று
முன்னமே சொன்னே னின்று முடிந்ததீ வினைபா ரென்றே. ()

ஆர்க்கும்பே ராசை யாகா தந்தண னொருவன் முன்னாள்
தீர்க்கரும் வறுமை தன்னைத் தீர்க்குநாள் வந்த போது
பேர்க்கும்பே ராசை கொண்டு பொருந்தினன் றுயர மென்றாள்
தார்க்குழலா லதுசொல் லென்னத் தையலுஞ் சாற்ற லுற்றாள். ()

## பேராசை கொண்டு பேதுற்ற கதை

[வேறு]

மன்னு மமரா வதிமேவு மறையோர் நால்வர் வறுமையினால்
இன்ன லடைந்தோர் யோகிதனை யெய்தி யிதனைத் தீர்த்தருணீ
என்ன வேண்ட வவன்றானீ ரிரண்டுசித்தி தமை யெண்ணி
பன்னு மவர்தந் தலைமீது பரிந்தொவ் வொருவர்த் தியைவைத்து.

நீவி ரிமய வரைநோக்கி நெடுந்தூ ரஞ்சென் றிடினவன்மேல்
மேவு வர்த்தி விழுகின்ற தவனுக் கங்கே வேண்டுநிதி
பூவி னிருக்குங் கொள்கவெனப் போனார் போகும் வழிநடுவே
தாவி லொருவன் வர்த்திவிழக் கண்டா னங்கு தாமிரமே. (6 2)

மூவர் தமக்குங் காட்டியிதை முறையால் வாரிக் கொள்வமெனக்
கூவ நீயே கொள்கவிதிற் கூடும் பயனென் னெனவவனும்
தேவ னமக்குத் தந்ததிது வென்னக் கொண்டு சென்றனன்பின்
ஆவ லுறுமூ வரும்போம்போ தங்கே வீழ்ந்த தொருவனுக்கே. ()

வெள்ளி தனைக்கண் டவனுமவ்வா றுரைக்க மேலு மாசையுற்றார்
உள்ள துனக்கே யிதுவென்ன வுரைத்தா ருற்றா னவன்கொண்டு
மெள்ளச் செலவங் கொருவற்கு வீழத் திரிபொன் னுறல்கண்டு
கொள்ளு வாமீ திருவருமென் றோதக் கொளும்பே ராசையால். ()

நீயே கொள்கென் றுரைத்தொருவ னீங்க நீயும் வந்தபின்பு
தூயோ யூர்க்குச் செல்வமெனச் சொல்ல விரைவின் வந்திடுவன்
தாயே யனையா யிருவென்று சாற்றிப் போனா னல்லிடத்துச்
சாயா தொருசக் கரமொருவன் றலையிற் சுழலக் கண்டனனால். ()

கண்டு நீயா ருன்மேற்சக் கரந்தான் சுழலுங் காரணமென்
விண்டு புகலென் றிடவவனை விட்டுக் கேட்ட விவன்றலைமேல்
பண்டு சுழன்ற தெனச்சுழலப் பயந்தி தென்றோ கிணறுவெட்ட
மிண்டு பூதம் புறப்பட்டாற் போல விளைந்த வேதனையே. (66)

என்னக் கவலை யுடனவனைக் கேட்க வவனு மியம்புவான்
முன்னைக் குபேரன் சாபத்தா லென்மேற் சுழன்ற முனையாழி
உன்னைக் கண்டாற் றீருமென வுரைத்தா னன்றோ னவ்வாறே
நின்னைக் கண்ட வெனைவிடுத்த தெனலும் வர்த்தி நெடுந்தலையன்.

வருந்திப் பிள்ளை யார்பிடிக்கக் குரங்காய் முடிந்த வாறதுபோல்
பொருந்திற் றென்று துன்புற்றுப் புகலா யிங்கெத் தனைநாளா
யிருந்திட் டனையென் றிடக்கால மெனக்குத் தெரியா சிராமன்
திருந்தப் புவியாள் காலமென்று செப்பி னான்முன் றிகிரிதான்.()

தருவார் நீர்சோ ருரென்னத் தாகம் பசியிங் கில்லையெனத்
திருவார் குபேர னிதிகவரச் சேர்வார் தம்மை யச்சுறுக்கப்
பெரிதா வைத்த வாழியென்று பேசிப் புகன்றான் பின்புமுன்பு
பரிவாய்க் காத்த சுவர்னசித்தி பார்த்துப் பார்த்துக் கண்பூத்தே.

தேடி வருங்காற் சக்கரந்தான் சிரமேற் சுழல வவனிருத்தல்
நாடி யிதுவென் னெனக்கேட்க நண்பா பேரா சையின்வந்த
பாடென் றுரைக்கச் சுவர்ணசித்தி பயந்து பிள்ளை வரந்தேடிக்
கூடு புருஷன் றனைப்பறிதான் கொடுத்தாற்போலா யிற்றென்றே.

சற்றே கலங்கிப் பின்றெளிந்து சாற்றும் வெள்ளைப் புத்தியினோர்
மற்றோ ரறிவைக் கேளாமன் மாண்ட சிங்க முயச்செய்து
கற்றே யுறுமந் திரவலியைக் காட்டுங் கதைபோ லானதென்றான்
மற்றே ததுசொல் லெனக்கேட்க வுருப்பான் சுவர்ண சித்தியே.()

## சிங்கத்தைப் பிழைப்பித்துச் செத்த கதை

துளசா புரத்தி னால்வ ரொரு தொடர்பாய்க் கல்வி பயின்றோர்கள்
வளமா ரவரி னொருமூவர் மந்தி ரத்தின் மிக்கமையால்
தளமா ரரசன் றனைக்கண்டு தங்கள் வித்தைத் திறங்காட்டி
ஒளியார் தனங்கண் மிகவீட்டற் குன்னித் தம்முட் கூறுவார். (72)

இவன்றான் மிக்க கல்வியில் னெனினும் நம்மோ டிருந்துபடித்
தவனு தலினு மொருபங்கு தருவோ மென்றங் குடனழைத்துப்
புவியா ளரச னிடைப்போகும் போதி லந்த வழியினிடைச்
சவமாஞ் சிங்கந் தனைக்கண்டு தம்மந் திரஞ்சோ திக்கவெண்ணி. ()

கற்ற வித்தை யாற்செத்த கண்ட ரவத்தை யெழுப்புவேன்
மற்றை யவர்க்குச் சம்மதமோ வென்ன மந்தி ரந்தெரியா
துற்ற வொருவ னெழுப்பிலது கொல்லு மென்ன வுரைத்திடலும்
பற்றி யவனைத் தள்ள வவன் பயந்தோர் மரத்தி லேறினான். (74)

எழுப்பி னார்பின் பதுகொல்ல விறந்தா ரம்மூ வருமிதனால்
இழுக்கி லாத கல்வியினு மறிவே பெரிதென் றிசைத்திடலும்
ஒழுக்க மறுநே மித்தலைய னாமே பெரிதென் றொருகதைதான்
பழுத்த செம்பொன் பெற்றோற்குப் பரிவ தாகப் புகல்வானே. ()

## அறிவின் மிக்க மீன்கள் இறந்த கதை

மறுவின் மகத தேயத்து மலர்பொய் கையினில் வீற்றிருக்கும்
அறிவா யிரத்த னூற்றறிவ னெனுமீ னிரண்டோ டங்கிருக்கப்
பெறுமோ ரறிவ னெனுந்தவளை பிரியா துறைந்த தத்தவளை
உறுகால் வலைஞ ரொருநாளங் குற்றுப் பேசு முரைகேட்டே. (76)

இருமீன் களையுந் தானோக்கி யிங்கு நாளை வலைஞன்வந்து
பெருமீ னெல்லாம் பிடிப்பனென்று பேசி னான்யா மிப்போதே
ஒருநீர்த் தடத்துக் கேகுவது நன்மை யென்ன வுரைத்திடலும்
அருநீர் நடையின் மிகவல்லே னென்றா னறிவா யிரத்தானே. ()

நிலையிற் பெயரா லாகாதென் றுரைத்தா னிகழு நூற்றறிவன்
அலையிற் றிகழுந் தவளைநா னகல்வ னெனப்போ தலும்பின்னுள்
வலைஞன் மீனங் களையெல்லாம் வாரிக் கொண்டு போம்போது
கொலையிற் படுதன் னட்பினரைக் குலவோ ரறிவன் கண்டனனே.

பேட்டை தனக்கு மதுகாட்டிப் பேசு மென்றன் சொற்கேளா
மட்டி யறிவா யிரத்தனொடு வளர்நூற் றறிவன் சுற்றமொடு
பட்ட பாடு மெனதிருப்பும் பாரென் றுரைத்த ததனாலே
தட்டின் மிக்க வறிவனையுந் தீயூழ் வந்து தடுக்குமென்றான். (79)

## இசைபாடிக் கழுதை யிடருற்ற கதை

பரிதி தானிவ் வாறுரைக்கப் பைம்பொன் பெற்றோ னிசைபாடி
ஒருபுன் கழுதைக் குற்றதுபோ லுனக்கிவ் விடர்தா னுற்றதெனத்
தெரிய வதுகூ றென்னநெடுஞ் செவிய லென்று மொருகழுதை
பொருவில் சுமதி நரியினொடு புலத்திற் பயிர்மேய்ந் துறுநாளில். ()

மேவு மொருநாள் விலாப்புடைகள் வீங்க மேய்ந்து தேக்கெறிந்து
தாவில் கழுதை நிலவெறிக்குந் தண்ணு ரிரவி னிற்பொழுது
போவ தற்குச் சங்கீதம் புகல்வே னீகே ளெனநரியும்
ஏவு முனது குரல்கேட்டாற் கொல்வார் பயிர்காத் திடுவாரே. (81)

என்று சொல்லக் கேளாம லிராகம் பாடக் குரல்கேட்டே
ஒன்று கழுதை யெனவுழவ ருடம்பு நுறுங்கப் புடைத்திட்டார்
அன்று நரிதான் மாமாவென் பேச்சைக் கேளா வகந்தையினால்
இன்று பட்டா யெனவேசிற் றென்றான் பொன்பேற் றன்றானே.

## நகா வரம் பெற்றுச் சாலியன் இறந்த கதை

நிலைசயில் சுவர்ண சித்தி நிகழ்த்திய கதையைக் கேட்டே
இந்தநற் கதைகே ளென்றே யியம்புஞ்சக் கரத ரன்றான்
நந்துறு தடங்கள் சூழு நாரண புரத்தில் வாழும்
மந்தர நாமன் றந்து வாயன்வத் திரங்க ணெய்வோன். (83)

### வேறு

தறிமா முறித லாலே தக்கநன் மரம்வெட் டற்குச்
செறிவனந் தன்னிற் சென்று திரிந்தொரு வாகை கண்டு
முறியட வெட்டு தற்கு முயலும்போ ததன்மே னின்ற
அறிவுறு மியக்க னேக்கி யவனொடு மொன்று சொல்வான். (84)

இந்தவென் னிடத்தை வெட்டா யென்னினீ யிச்சை கொண்டு
வந்தநல் வரமீ வேனு னென்றனன் மகிழ்ந்து மீண்டு
நந்தலி னட்பா யுள்ள நாவிதன் றன்னைக் கேட்க
மந்திரி யாவே னுனீ யாசனும் வாங்கே னென்றான். (85)

மனைவியோ டிதையு ரைக்க மற்றவ ளரசு பெற்றால்
கனவிடை யூறு மேவு மாதலாற் காத லாநீ
இனமொரு தலையுங் கைக ளிரண்டும்பெற் றுற்று யானால்
தினமிரு தறிவி ரித்துச் செய்யலாம் வேலை யென்றாள். (86)

மாலையங் குழலாள் சொன்ன வார்த்தையே நல்ல தென்று
சாலியன் சென்று பெற்றுத் தன்னக ருற்றான் கண்டோர்
ஆலநே ரரக்க னமென் றானுக்கோர் கல்லைக் கொண்டு
மேலுற வெறிந்தார் செத்தான் மெய்விகா ரங்கொண் டோனே.

சக்கர தரனிவ் வாறு சாற்றிய கதையைக் கேட்டே
இக்குவ லயத்தொ ருத்தற் கிதமொழித் தகிதஞ் செய்தால்
துக்கமே யடைவ னென்று சுவர்ணசித் தியுமு ரைக்க
அக்கதை சொல்லு கென்ன வவன்றனக் கறைய லுற்றான். (88)

### குரங்கு பழி வாங்கிய கதை

நவமிகு மயோத்தி யானுஞ் சந்திர சேனன் றன்சேய்
கவிகளி னுடல் காணுங் கருத்தறிந் தொருசா லைக்கண்
சவிபெறு குரங்க னேகந் தான்வளர்த் திடுமந் நாளில்
புவிபுக ழரச னேவல் புரியவர் சண்டை யிட்டார். (89)

ஒருகுரங் கதுகேட் டுத்தன் னுறவினர்க் குரைக்கு மிப்போர்
பெருகுறிற் றீதா மற்றோர் வனத்தினும் பெயர்வோ மென்ன
உரைசெயக் கிழநின் சொற்கேட் டுண்பதை யறோமென் றேவா
னரமெலா மிகழ்ந்து பேச நடுங்கியங் கவரை விட்டே. (90)

தன்குடும் பத்தி னோடோர் கானிடைச் சார்ந்த தப்பால்
பின்பொரு நாளச் சண்டை பெரிதுற வவரி லேயோர்
வன்பினன் கொள்ளிக் கட்டை மற்றவன் மேலே வீச
முன்புறு குதிரைச் சாலை மேலது மூண்ட தன்றே. (91)

சாலையு மெரிய வாசி தாஞ்சில விறந்த வெண்ணில்
கோலவெம் புரவி தீயிற் கொண்டன காய மன்னன்
பாலடைந் ததனைக் காப்போர் பகர்தலு மந்நோய் தீர்க்கும்
சீலனை யழைத்து மாக்க டயினோய் நீக்கு கென்றான். (92)

மருத்துவன் குரங்கு நெய்யா லன்றிநோய் மாயா தென்றான்
செருத்தொழி லிறைவன் சாலை சேர்ந்துள குரங்கை யெல்லாம்
வருத்தியந் நெய்யைக் கொண்டு வாசிநோய் வாசி யாக்கென்
றுரைத்தன னவ்வா றேநோ யொழித்தனர் மருத்து நூலோர். ()

இப்பழி யிறையி டத்தே வாங்குவே னென்று முன்போய்த்
தப்பிய கிழக்கு ரங்கு தன்மனம் பதைத்தே யெண்ணி
ஒப்பிலாப் பெருங்கா னத்தி லொருகுள மிருக்கக் கண்டு
வெப்பறு பேயொன் றிங்கு மேவவே வேண்டு மென்று. (94)

எண்ணியக் குளத்திற் கஞ்சத் தாளினு லிருநீ ருண்ண
நண்ணிய பேய்கண் டங்கு நணுகிநின் பெருமை கண்டுன்
கண்ணெதிர்ப் பட்டே னென்று கழுத்துறு மாலை தன்னைத்
துண்ணென வெடுத்து நல்க வாங்கியே சொலுங்கு ரங்கே. (95)

எவ்வள விந்த நீரி லுனக்குள வலிமை யென்னச்
செவ்வியோ யிந்த நீரி லாயிரம் பேர்சேர்ந் தாலும்
கைவ்வலித் துண்டற் கான சத்தியென் கண்ணுண் டென்ன
விஷ்விடம் புசிப்பு னக்கே யான்கொடு வருவ னென்றே. (96)

மாலையைக் கழுத்திற் பூண்டு வானர மகன்று வேந்தன்
பாலடைந் திடவ வன்றான் பார்த்திந்த மணியின் மாலை
சீலனே யெங்கு சம்பா தித்தனை யெனக்கு ரங்கு
கோலமா ரொருகா னத்திற் குளந்தானொன் றுளது மன்னா. (97)

அக்குளந் தன்னிற் காலை யடைந்துமுன் குதிப்போர்க் கெல்லாம்
இக்கதிர் மணிக ளெய்து மெனச்சொல யானு மெய்தித்
திக்கொளி விரிக்குஞ் சோதிச் செழுமணி பெறுவே னென்று
புக்குவக் குரங்கி னோடும் போயினன் சேனை சூழ. (98)

போனபி னிதுவே காலம் புகுந்தநின் சேனை யெல்லாம்
கானவிர் மலர்த்த டத்திற் களிப்பொடு குதித்துத் தங்கட்
கானநன் மணிகள் கொண்ட பின்னரே யரச நீயும்
நானுமொண் மணிகள் கொள்வே மென்றதந் நாகந் தானே. (99)

அப்படி யாக வென்றே யரசனுஞ் சேனை யோரைக்
குப்புறு கென்ன வோதக் குதித்தலு மவரைப் பற்றித்
துப்புறு பூதந் தானுந் தொடர்ந்திழுத் துண்ட தங்கே
தப்புறு வேந்தன் றானுந் தடத்திடைக் காத்தி ருந்தான். (100)

நெடும்பொழு தங்கு காத்து நீரிடைக் குதித்த சேனை
அடங்கலும் வாராமை கண்டே யரசனக் குரங்கை நோக்கித்
தடந்தனிற் குதித்த சேனை சார்ந்தில தென்னே யென்றான்
நடந்தொரு மரத்தின் கொம்பி னுகமுன் னேறிச் சொல்லும். ()

கோழிபுகழ் வேந்த னேயெங் குலத்தையெல் லாநீ கொன்று
பழிதனை வாங்க வந்தேன் முடித்தனன் பண்டு நின்சோ
றழிபசிக் குண்டே னாத லாலுனை விடுத்தே னென்று
மொழிதா விரங்கி வேந்தன் முந்துதன் னகர்புக் கானே. (102)

அத்தகு கருமஞ் செய்தா யாதலி னிணக்கித் துன்பம்
சித்தியா யினதென் றோதி புறைவிடஞ் செல்வே னென்றான்
பத்தினீத் தென்னை விட்டுப் போகுதல் பண்போ யான்சொல்
இத்தைநீ கேட்டி யென்றே யியம்புவான் சுவர்ண சித்தி. (103)

## குரங்கு துன்புற்ற கதை

பன்னுசீர் மதுரை வாழ்வோன் பத்திர சேன வேந்தன்
அன்னவன் புதல்வி ரத்தி னாவதி யழகின் மிக்காள்
தன்னையோ ரரக்கன் பற்றச் சார்ந்தனைத் தோழிக் கோதச்
சொன்னதை யரக்கன் கேட்டுத் துணுக்கமுற் றெண்ணு வானால்.

நம்மினும் வலியோ னிந்த நாட்டமுற் றிவணி ருந்தால்
அம்மநா னென்செய் வேனென் றச்சமுற் றரச னில்வாழ்
செம்மைசேர் குதிரைப் பந்தி சேர்ந்தொரு குதிரை யாகி
விம்மலுற் றிருந்தா னந்த வேளையோர் கள்வன் வந்தான். (105)

அரக்கனுங் குதிரை தன்னைக் கவர்ந்ததன் மேலே யேறிச்
செருக்கொடு நடத்த நேரே செல்லுறு மையின டிக்கத்
தருக்கழிந் தோடல் கண்டு தழைந்தவோ ராலின் வீழை
வெருக்கொடு பற்றி யேறி மீதுசென் றனனக் கள்வன். (106)

குதிரையும் வெருவி யோடக் குரங்கொன்று கூவிச் சொல்லும்
பொருவிலா வரக்க னென புரவியே மனித னுக்கு
வெருவுத லென்னே யென்ன விளம்பலுஞ் சோரன் கேட்டுப்
பரியொடு குரங்கின் வாலைப் பற்றியே வருத்தி னானே. (107)

நீடுறு குரங்கு வஞ்ச முடைத்தெனை நினைந்த ரக்கன்
ஓடின னக்கு ரங்குக் குறுதுய ரெனக்கு மெய்தும்
ஆடுறு சக்க ரத்துக் கஞ்சினே னென்னென் றோத [கே.
ஈடிலாழ்க் கதையொன் றோது மிடருற்றோன் பொன்னுற் றோற்

## குருடன்முதல் மூவர் துணைப்பட்ட கதை

[வேறு]

மதுவூர் தனக்குக் காவலனா மதுசூ தனற்கு மும்முலைப்பெண்
புதுமை யாகப் பிறந்திடலாற் புரைதீர் சோதி டனையழைத்து
முதுமை யுடையீ ரிதற்குநான் முயல்வ தென்னே யென்னவவன்
இதுநன் காய்ந்து சொலவேண்டு மாரா யாம லிசைத்திட்டால். ()

சண்ட கருமன் செயல்போலாந் தலைவ வென்ன வவன்யாது
பண்டு புரிந்தா னெனவவன்றான் பாவுந் தண்ட காரணியத்
தண்டி யுறைவா னரக்கனவ னங்குற் றிடுமோர் பூசுரன்மேல்
மிண்டி யேறி நடத்திவரு நாளி லொருநாள் வேதியனும். (110)

பாத முனக்கு மெல்லியவா யிருக்கும் பரிசு புகலென்னப்
பேத வரக்க னீராடி யீரம் புலர்ந்த பின்செல்வேன்
ஆத லாலிவ் வாறிருந்த தென்றா னொருநா ளவ்வரக்கன்
சீத நீரிற் குளிக்கும்போ தோடி னானச் செழுமறையோன். (111)

அடியி னீரம் புலர்வதன்மு னப்பா னடப்ப தில்லையென்ற
படியா லன்றோ நமைப்பிடிக்க மாட்டா னென்று பார்ப்பானும்
நொடியி னகன்றா னெனவரக்க னொந்தங் கிருந்தா னாதலால்
நெடிதா ராய்ந்து சொல்லுதலே நீதி யென்றான் சோதிடனும். ()

பன்னா லாய்ந்து புரவலனைப் பார்த்து நீநின் மகளெதிரே
துன்ன லாகா மையின்வேறோர் துலங்கு மாடந் தனில்வைப்பாய்
என்ன வவ்வா றவன்வைத்தே யிருக்கு நாளி லவ்வனிதை
உன்னு மங்கைப் பருவமதை யுற்றா ளெனக்கேட் டரசனுமே. ()

இந்த மாது தனைக்கொள்வார்க் களவி னிதியோ டவனென
அந்த மொழிகேட் டொருகுருடன் கூனன்மிசையூர்ந் தடுத்தாச
தந்தி டென்ன வக்கணமே தந்தான் குருடற் கவ்வூர்விட்
டெந்த நாட்டி னாயினுநீ ரேகு மென்ன வவர்போனார். (114)

மற்றோர் நாட்டின் மூவரும்போய் வைகு நாளிற் கூனன்மிசை
உற்ற வாசை மிகக்குருட னுயிரைப் போக்க வுபாயமிது
கற்றே செத்த பாம்பொன்றைக் கறியாக் கிடுதற் கடுப்பேற்றிச்
சற்றே தீயூட் டெனக்குருடன் றானும் விறகிட் டெரித்திட்டான்.

வேகும் பாம்பி னாவியவன் விழியின் மேலே தாக்குதலால்
போகும் விழிக டெரிந்தனதூ ரத்திற் போகிக் குலாவுமவர்
மோகங் கண்டு போய்வளைந்த முதுகன் றனையீர்த் தெடுத்தவளா
தாகந் தன்னி லெறியநடு முலையு மறைந்த தப்பொழுதே. (116)

கூனன் கூனு நிமிர்ந்திட்ட தாத லாலிக் குவலயத்தில்
ஆன தெய்வ வருளுண்டேல் யாவு நலமா மென்றதன்பின்
நீநின் னகருக் கேகுங்கா னெறிக்குத் துணையோ டேகெனமுன்
போன துணையிற் பயன்கொள்கதை புகலு வான்சக் காதரனே.

## நண்டின் வழித்துணையாற் பிழைத்த கதை

[வேறு]

நாசிக தேயந் தன்னி னண்ணிய தத்த னென்பான்
தேசிகன் கரும முற்றச் செல்வனோ ரூர்க்கென் றோத
ஏசுறு வன்னை நீநற் றுணையொடு மேகு கென்றாள்
பேசுறுந் துணைபின் றென்னப் பின்னுமவ் வன்னை யெண்ணி. ()

அலவனைக் கலசத் துட்பெய் தவன்கையி லளிக்கக் கொண்டு
செலும்பொழு திளைப்பா யாங்கோர் செழுந்தரு நிழலிற் றூங்க
நலிதர விவனைத் தீண்ட நல்லரா வொன்று நண்ணிக்
கலசமுட் டலையை நீட்டக் கர்க்கட கந்தான் கண்டே. (119)

காரா வெனவி ளைந்து கடுங்கொடுக் காலி டுக்கி
மாரணஞ் செய்யப் பின்னர் மறையவன் விழித்துப் பார்த்துப்
போரா வதனைக் கொன்ற தாரெனப் பெரிது மெண்ணித்
தேருறு பொழுது நண்டாற் செத்ததீ தெனத்தெ ரிந்தான். (120)

மாதுரு வாக்கி யத்தை மன்னுமென் சிரத்திற் கொண்டு
போதரா லாற்பி ழைத்தே னென்றவன் புகுந்தா னென்று
நீதுளா னதைக் கேட்டுச் சுவர்ணசித் தியும வன்பால்
ஆதர வாகப் பேசித் தன்னக ரடைந்து வாழ்ந்தான். (121)

என்றிவை பலவும் பன்னி யிரங்கலுந் தனது பன்னி
நன்றென மறையோன் கேட்டு நாமறி யாம லந்தோ
இன்றுவந் துளதிப் பாவ மெனமறை முறையி னுய்ந்து
பின்னைநற் கழுவா யாற்றிப் பீழைதீர்ந் திருந்தா னன்றே. (122)

கூறினன் சோம சன்மா கொற்றவ னருளு மைந்தர்
தேறின ருபாய நீதித் திறமெலா மறிந்து கொண்டே
வீறின ராசன் முன்போய் விவேகத்தின் மாட்சி காட்டி
ஈரிலா வரசு பெற்றிவ் விருநிலம் புரந்து வாழ்ந்தார். (123)

ஐந்தாவது தந்திரம்

## அசம்பிரேட்சியகாரித்வம்

முற்றிற்று.

---

[பஞ்சதந்திரம் செய்யுள் முற்றுப் பெற்றது]



FIRST EDITION] [1000 COPIES